7



உ

என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே.

# அபிராமியந்தாதி

யாழ்ப்பாணம், ம. க. வேற்பிள்ளை உரை

## அபிராமி பதிகம்

யாழ்ப்பாணம்
கூட்டுறவுத் தமிழ்நூற் பதிப்பு விற்பனைக் கழகம்

யா. கூ. த. நூ. ப. வி. க. வெளியீடு 7

உ
கணபதி துணை

அபிராமிதேவியருள் பெற்று விளங்கிய

அ பி ரா மி ப ட் ட ர்

அருளிச் செய்த

# அபிராமியந்தாதி

யாழ்ப்பாணம், ம. க. வேற்பிள்ளை உரை

# அபிராமி பதிகம்



வெளியீடு:

யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ்நூற் பதிப்பு விற்பனைக் கழகம்
411/1, காங்கேசன்துறை வீதி, யாழ்ப்பாணம்.

முதற் பதிப்பு : 1970
இரண்டாம் பதிப்பு: 1978


விலை ரூபா: 4-50

APIRAMI PATTAR'S

# APIRAMI ANTHATHI

*with commentary by*

**M. K. VETPILLAI**

*and*

# APIRAMI PATHIKAM

*Published by:*

THE JAFFNA CO-OPERATIVE TAMIL BOOKS
PUBLICATION AND SALE SOCIETY LTD.
(Regd. No. J-1538 of 10-11-67)

411/1, K. K. S. Road, — Jaffna.

அச்சுப்பதிவு: செட்டியார் அச்சகம், யாழ்ப்பாணம்.

# பதிப்புரை

என்னை நன்ருக இறைவன் படைத்தனன்
தன்னை நன்ருகத் தமிழ்செய்யு மாறே.

தனந்தருங் கல்வி தருமொரு நாளுந் தளர்வறியா
மனந்தருந் தெய்வ வடிவுந் தருநெஞ்சில் வஞ்சமிலா
இனந்தரு நல்லன வெல்லாந் தருமன்ப ரென்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாளபி ராமி கடைக்கண்களே.

உலகில் ஒருவன் மகிழ்ச்சியோடு வாழ இன்றியமையாச் சிறப்பினவாகிய தனம், மனம், இனம், கல்வி முதலிய நல்லனவெல்லாவற்றையும் தரக்கூடியது உலகமாதாவாகிய அபிராமியம்மையின் கடைக்கண்ணேக்கமே. இதனைப் பெறுவதற்கு அவளை நாங்கள் அநுதினமும் போற்றிப் பரவுதல் வேண்டும். அதற்கு உபகாரமாய் இருப்பது அபிராமியந்தாதி என்னும் நூலேயாகும்.

இந்நூலைப் பத்தியோடு பாராயணம் பண்ணுபவர் பலர் இங்குளர். அவர்களுக்கு உதவும் வகையில் பலர் உரையெழுதியுள்ளார்கள். அவற்றினுள் எங்கள் யாழ்ப்பாணத்து மட்டுவில் க. வேற்பிள்ளை அவர்கள் செய்த உரையே பழைமையும் செம்மையும் வாய்ந்ததாகும்.

இவ்வருமந்த நூலும் உரையும் தமிழ்நாட்டில் பதிப்பிக்கப்பெற்று வந்துள்ளன; இவை ஈழத் தமிழ்நாட்டிலும் பரவலாகக் கிடைக்க வேண்டுமென்று பத்தர்கள் பலர் விரும்பினுர்கள். எனவே உரையாசிரியரின் அருந்தவப் புதல்வர் திரு. வே. நடராசா அவர்கள் ஆசி நல்க, இவற்றைத் தமது ஏழாவது வெளியீடாக அன்பர்கள் முன்னிலையில் மகிழ்ச்சியுடன் சமர்ப்பிக்கின்ருேம்.

இலங்கைப் பல்கலைக்கழகப் பௌதீக விஞ்ஞானப் பேராசிரியர் கலாநிதி ஆ. வி. மயில்வாகனம் அவர்களை அறியாதவர் இலங்கையில் இருக்கமுடியாது. அவர்களுடைய தமிழ்ப்பற்றும் சைவப்பற்றும் வானளாவியன. அவர்கள் எங்கள் கழகத்தில், அது தொடங்கிய காலத்திலேயே ஓர் உறுப்பினராகச் சேர்ந்து எங்கள் பணிகளுக்குப் பலவழிகளில் ஆக்கமும் ஊக்கமும் தந்து வருகின்றார்கள். இவ்வபிராமியந்தாதி வெளியீட்டுக்கென ஐம்பது ரூபா அன்பளிப்பாக வழங்கி ஆசியும் நல்கினர்கள். இந்நூலை வெளியிட இசைவு நல்கிய, உரையாசிரியரின் இளைய புதல்வராகிய திரு. வே. நடராசா *B.Sc*, *B. T.* அவர்கள் நன்கொடையாக இருபத்தைந்து ரூபா தந்து வாழ்த்தினர்கள். அவர்களிருவருக்கும் எங்கள் வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளையவர்கள் இந்நூலாசிரியர் பற்றி ஓர் ஆசியுரை வழங்கியுள்ளார்கள். அவர்கள் எங்கள் கழகப் பணிகளிலும் வளர்ச்சியிலும் காட்டிவரும் ஆர்வத்துக்கு நன்றி சொல்லியமையாது.

இந்நூல் அச்சாகுங்கால் அச்சுத் தாள்களைப் பார்த்துதவிய திரு. சி. சதாசிவமவர்களுக்கும், அச்சுத் தாள்களைப் பார்வை செய்ததோடு செய்யுள் முதற்குறிப்பகராதி முதலியவற்றை எழுதித்தந்த சைவப்புலவர், பண்டிதர் இ. செல்லத்துரையவர்களுக்கும், இந்நூலையும் அழகாக அச்சிற் பதிந்துத்தந்த யாழ்ப்பாணம் கூட்டுறவு அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி உரியது.

சி. சிவகுருநாதன்
தலைவர்
யா.கூ.த.நூ.ப.வி.கழகம்

411/1 காங்கேசன்துறை வீதி
யாழ்ப்பாணம்
20-5-70

## உரையாசிரியர் ம. க. வே. அவர்கள்
## பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள்
## எழுதியுதவியது

தமிழில் உரைக்கு எடுத்துக்காட்டாயிருந்து வருவது பரிமேலழகர் உரை.

திருமுருகாற்றுப்படை, சைவசமய நெறி, கோயிற் புராணம் என்றிவைகளுக்கு நாவலர் செய்த உரை பரி மேலழகருரையைப் பின்பற்றியது.

நாவலருக்குப் பின் நாவலரைப் பின்பற்றி உரைமரபு பேணி உரை செய்த ஒருவர் மட்டுவில் க. வேற்பிள்ளை ஆசிரியர் அவர்கள். இவர் நாவலருக்கும் அவர் மருகர் வித்துவசிரோமணிக்கும் மாணவர். உரையாசிரியர் என்ற சிறப்புப் பெயர் வித்துவசிரோமணியால் இவருக்கு வழங்கப்பட்டது.

திருவாதவூரடிகள் புராண விருத்தியுரையும் அபிராமி யந்தாதி உரையும் உரையாசிரியர் செய்த உரைகளிற் குறிப்பிடத்தக்கவை.

அபிராமியந்தாதியுரை முதுமையும் பக்தியும் கனிந்த காலத்தில் சிதம்பரதலவாசஞ் செய்யும்போது செய்தது.

கருத்துக்கேற்ற வகையில் மூலத்தை வகுத்துக் கொள்ளுதல், சொற்களை வேண்டுமிடத்துக் கொண்டு கூட்டுதல், சொற்களின் ஆற்றல் தோன்றப் பதப்பொருள் செய்தல், வருவிக்க வேண்டியவைகளை அளவறிந்து வருவித்தல், சொன்னயங் கூறல், கருத்துக்களுக்கு விசேட விளக்கந் தருதல், இலக்கணக் குறிப்பு, அணிநயம் என்றின்னோரன்னவைகளை, உரை மரபு பேணி ஓசை நயம்பட ஆளுவதில் தனிமுறைகள் உண்டு. இம்முறைகள் நூலின் அருமை பெருமைகளைப் புலப்படுத்தி, அவ்வாற்றால் தாமும் பேணப் படுபவைகள்.

அபிராமியந்தாதி உரையில் வரும் உரைமரபு பேணிய தனிச்சிறப்புக்கள், நூல்போலவே போற்றிப் பயிலவேண்டியவை; பாடல்களை மேன்மேலும் இனிக்கச் செய்பவை.

27-4-70 சி. க.

உ
கள்ளவாரணப்பிள்ளையார் துணை

# அபிராமிபட்டர்

## சரித்திரச் சுருக்கம்

ஸ்ரீசிதம்பரம் முதலிய எண்ணிறந்த சிவஸ்தலங்களைத் தன்னிடத்துடைய சோழநாட்டிலே காவிரி நதியின் தென் கரையிலுள்ளதும், தமக்குச் சிவஞானம் வேண்டும் என்று பிரார்த்தித்த பிரமதேவருக்குத் திருக்கைலாசபதி கொடுத்தருளிய மௌனவித்திலிருந்து உற்பவித்த தலவிருக்ஷமாகிய வில்வங் காரணமாக வில்வாரணியமென்றும் திருநாமம் பெற்றதும், மார்க்கண்டேயமுனிவர் அமிர்தலிங்கத்தைப் பூசித்து யமனைச் செயித்ததும் முதலாகிய அநேக விசேடங்களையுடைய திருக்கடவூரென்னுந் திவ்விய க்ஷேத்திரத்திலே ஏறக்குறைய அறுநூறு வருடங்களுக்கு முன் ஒரு ஸ்மார்த்த வேதியரிடத்திலே தேவி திருவருளினால் ஒரு சற்புத்திரர் அவதரித்தார். அவர் இளமைப் பருவத்திலே தமிழ் சமஸ்கிருதம் என்னும் இருபாஷைகளிலும் பலவகை நூல்களைக் கற்று, கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்து, சங்கீதத்தில் வல்லவராய், தேவியின்மேல் இராகமாலிகா கீர்த்தனம் பாடி, திருக்கடவூர்ச் சிவாலயத்தில் எழுந்தருளியிருக்கும் அபிராமியம்மையாரிடத்துப் பத்தி மிகுந்து, அவரை நாடோறும் நியமமாகச் சென்று வழிபட்டு ஆன்மார்த்தமாகவும் பூசித்துவந்தார்.

அவர் அபிராமிதேவியின்மேல் வைத்த மெய்யன்பை உள்ளபடி அறியாமல், அத்தேவியை ஆன்மார்த்தமாக வழிபட்டு வருதலை அறிந்த ஸ்மார்த்த வேதியர் சிலர் ‡ "இவர் பரிவாரதேவதா சத்திபூசை செய்து வருகின்றார்." எனத் திரித்துணர்ந்து அவர்மேற் பகை பாராட்டி, தைய மாவாஸையிலே காவேரி சங்கமஸ்நானஞ் செய்து திருக்கடவூரில் வந்து தங்கிய தஞ்சைச் சரபோஜி மகாராஜாவைக் கண்டு, இந்நூலாசிரியர் மாட்டுத் தமக்கிருக்கும் அபிப்பிராயத்தைத் தெரிவித்தார்கள். அரசன் அதனைக் கேட்டு அவ்வாசிரியரை வருவித்து, "இன்று புச்ச அமாவாசை எத்தனை நாழிகை வரையில் இருக்கின்றது" என்று உபாயமாக வினவ, தேவி உபாசனானந்தத்தில் அமிழ்ந்தியிருந்த § அவர் "இன்று பௌர்ணிதாதிதியல்லவா" என்று நிதானந்தவறி விடை கூறினார். அதனை அரசன் கேட்டு, இவர்மீது வேதியர் கூறிய தோஷம் சத்தியமென்று தன்னுள் நிச்சயித்துக்கொண்டு, கோபக் குறிப்போடும் "நீர் போய்வாரும்" என்றனுப்பிவிட்டான்.

---

‡ இவர் பரிவாரதேவதாசத்திபூசை செய்தாரல்லர் என்பது, "வீணே பலிகவர் தெய்வங்கள் பாற்சென்று மிக்கவன்பு பூணேனுனக்கன்பு பூண்டுகொண்டேன்" (64) "அணங்கே யணங்குக ணின்பரி வாரங்க ளாகையினால் வணங்கேனொருவரை" (81) என்றற்றொடக்கத்தனவாக இவர் கூறிய செய்யுள்களால் இனிது விளங்கும்.

§ இவர் தேவியுபாசனானந்தமேலீடு,
"விரும்பித் தொழுமடி யார்விழி நீர்மல்கி மெய்புளக
மரும்பித் ததும்பிய வானந்த மாகி யறிவிழந்து
சுரும்பிற் களித்து மொழிதடு மாறிமுன் சொன்ன [வெல்லாந்
தரும்பித்த ராவரென் றாலபி ராமி சமயநன்றே"
என்னுஞ் செய்யுளால் அறிக. (94)

தமதுறைவிடத்தை யடைந்த ஆசிரியர், தாம் அரசன் முன்னே திதியை நிதானந்தவறிக் கூறினமை பின்பு தேவி திருவருளினலே தமதுள்ளத்துத் தோன்றுதலும், "என் னுயிர்த் துணையாகிய அபிராமிதேவியே இத்தவற்றினின் றும் எம்மைக் காத்தருளுவர்" என்று கடைப்பிடித்து, அத்தேவி சந்நிதியிற்போய் மெய்யன்போடு வணங்கி, "மகாதேவியே முன் என்னுள்ளத்தை பேதித்த தேவ ரீரே இப்பொழுதும் தமியேனை அரசனுக்குக் கூறிய சொற் சோர்வினின்றும் பாதுகாக்க வேண்டும்" என்று பிரார்த் தித்து, ஒருவகை அரிகண்டம் பாடத்தொடங்கி, தேவி சந்நிதியில் ஒரு கச நீளமும் அகலமும் ஆழமுமுள்ள ஒரு குழி அகழ்ந்து அதில் அக்கினியைச் சுவாலிப்பித்து அக் குழியின் நான்கு திக்கிலும் நாட்டிய இருப்புக்கால்களின் மேல் இருப்புக் கம்பிகளினல் விட்டம் பூட்டி அவற்றில் நூறு கயிறுகளை மாட்டித்தொங்கவிட்டு உறியாகப்பின்னி, அவ்வுறியின்மேல் தாம் இருந்து கொண்டு, "அபிராமி தேவி நமக்கு நேரே எழுந்தருளிவந்து காட்சி தந்தருளா தொழியின், இவ்வக்கினியில் வீழ்ந்து பிராணத்தியாகஞ் செய்து விடுவோம்" என்று கடைப்பிடித்து, அத்தேவி தமக்கு நேரே காட்சி தந்தருளல் வேண்டும் என்னுங் கருத்தால் **"உதிக்கின்ற"** என்னுஞ் சொல்லை முதலில் வைத்து இவ்வந்தாதியைப் பாடஆரம்பித்து, அபிராமிதேவி பிரசன்ன மாகா மையின், ஒவ்வொரு பாட்டினிறுதியி லும் உறியின் ஒவ்வொரு கயிற்றை அரிந்துகொண்டு வந் தார்.

இங்ஙனம் பாடிக்கொண்டு வரும்பொழுது **"விழிக்கே யருளுண்டு"** என்னும் எழுபத்தொன்பதாவது பாடல்பாடி முடிந்தவுடன் அபிராமிதேவி அவருக்குப் பிரசன்னராகி அருள்புரிந்து, தமது ஒரு திருத்தோட்டைக் கழற்றி ஆகா யத்தில் வீசியருளி, "அன்பனே! நீ அரசனுக்குக் கூறிய வார்த்தையை மெய்யாக்கிவிட்டோம்; உன் கவலையை யொழி; நீ நம்மீது மெய்யன்போடு பாடிய இவ்வந்த

தியை நாம் உவந்து ஏற்றுக்கொண்டோம்; நீ தேகாந்தத்தில் நம்முடைய பதத்தை அடைவாய். இவ்வந்தாதியை மெய்யன்போடு பாராயணஞ் செய்பவர், பொருள் சொல்பவர், கேட்பவர் ஆகிய இவர்கள் யாவரும் இம்மைமறுமைகளில் வேண்டிய வேண்டியாங்கு இன்பம் அநுபவித்துப் பின்பு மோக்ஷத்தையடைவார்கள் என்று நீ இவ்வந்தாதியிலமைத்துப் பாடியபடி ஆகுக'' என்று ஆசிர்வதித்து மறைந்தருளினர்.

ஆசிரியர் அம்மையாரைக் காணாது கலங்கி அவர் மறைந்த திக்கை நோக்கி வணங்கி, **'கூட்டியவா வென்னை'** என்னும் எண்பதாவது பாட்டிலே தேவி தமக்கு அருள் செய்த திறத்தை அமைத்தும், மற்றைப் பாடல்களிலே தேவி இதற்கு முன் தமக்குத் திருவடி தீக்ஷை செய்தமை முதலிய அரும்பெரும் விஷயங்களை அமைத்தும் எஞ்சிய கயிறுகளை, அரியாது எஞ்சிய பாடல்களைப்பாடி நூலைப் பூர்த்தி செய்து விட்டு, தமது உறைவிடத்தையடைந்தனர்.

அற்றைச் சூரியாஸ்தமயன காலத்திலே தேவி ஆகாயத்தில் வீசிய திருத்தோடானது அநேக சந்திரர் ஒருங்கு திரண்டுதித்தாற்போல உதித்தலும், அதனைக் கண்ட சரபோஜி மகாராஜா முதலாயினோர் ''பூர்வபக்கப் பிரதமையிற் பூர்ண சந்திரோதயப்பிரகாசம் உண்டாயிற்று. இஃதென்னை யற்புதம்! அற்புதம்!'' என்று பேராச்சரிய முற்றுப் பின்பு ''இது அபிராமியம்மை தமதடியவர் வாக்கைப் பாதுகாக்கும்பொருட்டுச் செய்தருளிய பெருங் கருணைத் திறமேயாம்'' என்று துணிந்தனர். உடனே அரசன் ''தேவியின் மெய்யடியாரது பெருந்தன்மையை யறியாமல் அவமதித்தோமே, இனி இப்பெருங் கொடும் பாவத்துக்கு என்ன பிராயச்சித்தஞ் செய்வது'' என்று கருதித் தன்னை நொந்து உள்ளமும் சரீரமும் நடுநடுங்க டிவந்து ஆசிரியரைக் கண்டு விழுந்து நமஸ்கரித்து, அடி

யேன் செய்த அபராதத்தைப் பொறுத்தருளல் வேண்டும்'' என்று பலமுறை பிரார்த்திக்க, அவர் அரசனை ஆசீர் வதித்து, ''தேவி திருவருள் உன்னாலும் என்னாலும் அறி யத் தக்கதா'' என்று கூறி, அவனுக்கு அருள்புரிந்தனர். அவன் ''இன்று முதலாகத் தங்களுக்கு, ''அபிராமிப்பட்டர் எனத் திருநாமம் வழங்குக'' என்றும், ''அடியேனுடைய உபகாரத்தைப் பெற்றுக்கொள்ளல் வேண்டும்'' என்றும் வேண்டினான். அபிராமிபட்டர் ''நமக்கு அபிராமிதேவியி னுடைய திருவருளே அமையும்; மற்றொன்றும் வேண்டுவ தில்லை'' என மறுக்க, பின்னும் அரசன் அதிவிநயத்துடன் ''தங்கள் சந்ததியார் பொருட்டாவது இதற்குத் தாங்கள் உடன்பட்டருளல் வேண்டும்'' என்று மிகவும் பிரார்த்தித் தான். அதற்கு அவர் மனமிரங்கி ஒருவாறு உடன்படலும் அரசன் இந்தக் கிராமத்திலும் சுற்றுக் கிராமங்களிலும் வருஷம் ஒன்றுக்கு வேலிக்கு எண்ணாழி நெல்லு அவர் சந்ததியாருக்குக் கொடுக்கும்படி உத்தரவளித்து, அவரை மீட்டும் நமஸ்கரித்து, ஆசீர்வதிக்கப்பெற்றுத் தன் இராச தானியையடைந்தான். அபிராமிபட்டருடைய சந்ததியார் அவ்வரசன் உபசரித்த சர்வமானியத்தை இன்றும் பெற் றுக்கொண்டு வருகின்றனர். அது நிற்க.

அபிராமிப்பட்டர் அபிராமிதேவியை முன்னையினும் மிக்க சிரத்தையுடன் வழிபட்டு ஆன்மார்த்தமாகவும் பூசித்து அநுபூதிமானாகி, சிலகாலத்தின்பின் அத்தேவியி னுடைய திருவடிநீழலை அடைந்தருளினார். இவர் இன்னுஞ் சில அற்புதங்களைச் செய்தார் என்பது கர்ணபாரம்பரி யம். அவற்றை ஈண்டு விரிக்கிற் பெருகும்.

ம. க. வேற்பிள்ளை
சிதம்பரம்



திருக்கேதீச்சரத்திலே எழுந்தருளியிருக்கும்

ஸ்ரீ இராஜராஜேசுவரி அம்மை

உ

கணபதி துணை

# அபிராமியந்தாதி

## மூலமும் உரையும்

---

### காப்பு

தாரமர் கொன்றையுஞ் சண்பக மாலையுஞ் சாத்துந்தில்லை
யூரர்தம் பாகத் துமைமைந்த னேயுல கேழும்பெற்ற
சீரபி ராமியந் தாதியெப் போதுமென் சிந்தையுள்ளே
காரமர் மேனிக் கணபதி யேநிற்கக் கட்டுரையே.

இதன் பொருள்: அமர் கொன்றைத் தாரும் சண்பகமாலை யும் சாத்தும்—பிரணவரீதியாகப் பொருந்துங் கொன்றை மலர் மாலையையும் சண்பக மலர்மாலையையும் தரித்தரு ளும், தில்லை ஊரர் தம்பாகத்து உமை மைந்தனே—சிதம்பர சிற்சபா நாயகரும் அவரது வாமபாகத்தில் நடன சாக்ஷியாய் நின்றருளும் சிவகாமசுந்தரி தேவியுமாகிய இருவருக்குந் திருக்குமாரரே, கார் அமர் மேனிக் கண பதியே—கருநிறம் பொருந்திய திருமேனியையுடைய மகா கணபதியே, ஏழு உலகும் பெற்ற சீர் அபிராமியந்தாதி—சத்த லோகங்களையும் கருவுருதுயிர்த்தருளிய சிறப்பை யுடைய அபிராமிதேவியின்மீது தமியேன் பாடத்தொடங் கும் அந்தாதியின் பொருள், என்சிந்தையுள்ளே எப் போதும் நிற்கக் கட்டுரை—எனது தியானத்தின் கண்ணே சதாகாலமும் நிலை பெறும்படி கட்டுரைத்தருளும். என்ற வாறு.

ஈண்டுக்கட்டுரைத்தல் உறுதிமொழியான் வரந்தருளுத லின் மேற்று. கட்டுதி என்பது பாடமாயின், பொதிந்தருளு மெனப் பொருள் கூறுக. கொன்றையும் என்னும் உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. மாலைகளிரண்டையுஞ் சிவம் சத்தி யாகிய இருவருக்கும் நிரனிறைவகையாற் கொள்க. சண் பகப்பூமாலை விசேடகிழமைத்தாதலைச் சண்பகப்பூங்கோதை சண்பகவல்லி என்னுந் தேவி திருநாமங்களானும், சைவ புராணங்களானும் அறிக. கொன்றை, சண்பகம், அந்தாதி என்பன ஆகுபெயர். ஏழும் என்னும் உம்மையை எச்ச வும்மையாக்கி ஏனையவுலகங்களையுந் தழுவிக்கொள்க. பொரு ளென்றது தேவியின் தடத்த சொரூப இலக்கணங்களை. அந் தாதி, நின்ற செய்யுளின் அந்தம் வருஞ் செய்யுட்கு ஆதி யாகத் தொடுக்கப்படுவது. அது, எழுத்து அசை சீர் முதலி யவற்றாற் பலதிறப்படுதலை யாப்பிலக்கணத்துட் காண்க.

கொன்றைமாலை சிவபெருமானுக்குத் திருவடையாள மாலையாகலின், அதனைமுதற்கட்டந்து, தாரமர்கொன்றை யென விதந்தும், தில்லை அநாதிநித்தியமாகிய பஞ்சகிருத் திய நடனத்தோடும் ஆயிரத்தெட்டுக் கலைகளோடும் எழுந் தருளியிருக்கும் மூலஸ்தானமாகிய சிதாகாசப்பழம்பதியாத லானும், அங்கெழுந்தருளியிருக்கும் நடராஜமூர்த்தி துரிய மூர்த்தியும் சத்தி பராசத்தியுமாகலானும் தில்லையூரர் தம் பாகத்து உமையெனவும், விநாயகக் கடவுள் அவ்விருவருக் கும் சிரேட்ட புத்திரராகலின், மைந்தனே எனவும், அட்ட வித்தியேசுரர் முதலிய சிவகண பேதங்கட்கெல்லாம் அதி பதியாகலின் கணபதியேயெனவும், அபிராமிதேவி சர்வ லோக சனனியாகலின் உலகேழும் பெற்ற சீரபிராமியென வும், அத்தேவிமீது தாம் புனையப் புகும் அந்தாதியின் பொருள், தம் உழப்பிழந்து என்னும் இரு காலங்களிலும் தந்தியானப் பொருளாயிருக்கும் வரந்தருளுமென்பார் அந்தாதியெப்போதுமென் சிந்தையுள்ளே நிற்கக் கட்டுரை எனவுங் கூறினார். உழப்புக்காலம் தம்வசமுடைய முயற்சிக் காலம்; இழப்புக்காலம் அஃதிழந்தகாலம்.

கணபதியே, அபிராமியந்தாதிப்பொருள் சதாகாலமும் என் தியானப்பொருளாயிருக்குமாறு வரந் தந்தருளு மெனவே, இவ்வந்தாதியை அன்போடு படிப்போர் கேட் போருக்கும் அங்ஙனம் வரமீந்தருளுகஎன ஆசிரியர் பிரார்த் தித்தமை தானே போதருமென்க.

இங்ஙனம் செய்யுள்கடோறும் பதசாரம் விரித்துரைக்கப் புகின், உரை விரியுமாகலானும், அது, அந்தாதியுரை யாசிரியர்களது தொன்னெறிமரபன்மையானும் இயன்ற துணையும் சுருக்கிச்செய்துமென்க.

---

## நூல்

உதிக்கின்ற செங்கதி ருச்சித் திலக முணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்க மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனி யபிராமி யென்றன் விழுத்துணையே.

இ - ள்: உதிக்கின்ற-செங்கதிர் – உதயஞ் செய்கின்ற செவ்விய பாலசூரியனும், உச்சித் திலகம்—உயர்வாகிய மஞ்சாடி மலரும், உணர்வு உடையோர் மதிக்கின்ற மாணிக்கம்—இரத்தின பரீக்ஷை நூலுணர்வுடையார் நன்கு மதிக்கின்ற மாணிக்கமணியும், மாதுளம்போது—மாதுள மலரும், மின்கொடி—மின்னற் கொடியும், மென்கடிக் குங்கும தோயம் என்ன—மிருதுவாகிய வாசனை பொருந்திய குங்குமக் குழம்பும் போல, விதிக்கின்ற மேனி - நூல்கள் விதிக்கின்ற சிவந்த திருமேனியையுடைய, மலர்க்கமலை துதிக்கின்ற— செந்தாமரை மலராசனியாகிய மகாலக்குமி தோத்திரஞ்செய்கின்ற, அபிராமி என் விழுத்துணை — அபி ராமிதேவி என் உயிர்த்துணையாம். எ - று.

திலகம் – ஆகுபெயர். விழுத்துணை-சிறந்ததுணை. கமலை துதிக்கின்ற மேனி, விதிக்கின்ற மேனி எனத் தனித்தனி முடிக்க. தேவிக்குச் செந்நிறம் நூல்கள் விதிக்கின்றதை,

"கொம்பனை யானைக் குவிமுலை மங்கையை
வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச்
செம்பவ ளத்திரு மேனிச் சிறுமியை
நம்பியென் னுள்ளே நயந்துவைத் தேனே."

— திருமந்திரம்.

என்னும் செய்யுளானு மறிக. (1)

துணையுந் தொழுந்தெய்வ மும்பெற்ற தாயுஞ் சுருதிகளின்
பணையுங் கொழுந்தும் பதிகொண்ட வேரும் பனிமலர்ப்பூங்
கணையுங் கருப்புச் சிலையுமென் பாசாங் குசமுங்கையி
லணையுந் திரிபுர சுந்தரி யாவ தறிந்தனமே.

இ - ள்: பனி மலர்ப் பூங்கணையும்—குளிர்ச்சி பொருந்திய புஷ்ப பாணங்களும், கருப்புச் சிலையும்க—ருப்பு வில்லும், மென்பாச அங்குசமும்—மெல்லிய பாசமும் தோட்டியும், கையில் அணையும் திரிபுர சுந்தரி—திருக்கரங்களிற் பொருந்தப்பெறும் திரிபுரசுந்தரியாகிய அபிராமிதேவி, துணையும்—எமக்குயிர்த் துணையும், தொழும் தெய்வமும் - வழிபடு கடவுளும், பெற்றதாயும்—எம்மைப்பெற்ற நற்றாயும், சுருதிகளின் பணையும் — வேத பாதவங்களின் சாகைகளும், கொழுந்தும்—அவற்றின் கொழுந்துகளும், பதிகொண்ட வேரும் ஆவது—அவற்றின் பதியுந்தன்மையைக் கொண்ட மூலவேரும் ஆதலை, அறிந்தனம்—யாம் திருவருள் வாயிலாக அறிந்துகொண்டோம். எ-று.

எண்ணும்மைகளுள் முன்னைய ஆறும் ஆவது என்னும் ஆக்கத்தையும், பின்னைய மூன்றும் அவ்வாக்கத்தின் எழுவா

யாகிய திரிபுரசுந்தரியையும் விசேடித்து இருபிரிவினதாய் நின்றன. திரிபுரசக்கரத்துக்கு அதிதெய்வமாகலின் அபிராமிதேவியைத் திரிபுரசுந்தரி என்றார். திரிபுரமாவன, அத்தேவிசக்கரத்துட் சந்திரகண்டமும் அக்கினிகண்டமும் சூரியகண்டமுமாம். அபிராமியெனினும் சுந்தரியெனினும் ஒக்கும். அபிராமம் – அழகு. சாகை-கிளை. கொழுந்தென்றது உபநிடதங்களை. வேர் என்பது பிரணவத்தை (2)

அறிந்தே னெவரு மறியா மறையை யறிந்துகொண்டு
செறிந்தே னுனது திருவடிக் கேதிரு வேவெருவிப்
பிறிந்தேனின் னன்பர் பெருமை யெண்ணாத கருமநெஞ்சான்
மறிந்தே விழுநர குக்குற வாய மனிதரையே.

இ – ள்: திருவே — அருட்செல்வியாகிய அபிராமிதேவியே. எவரும் அறியா மறையை அறிந்தேன்—மற்றெவருமறியாத வேதரகசியத்தைத் திருவருள் வாயிலாகத் தமியேன் அறிந்தேன், அறிந்து கொண்டு—அங்ஙனம் அறிந்து கொண்டு, நின் அன்பர் — தேவரீருடைய மெய்யன்பர்களது, பெருமை எண்ணாத கரும நெஞ்சால்—மகிமையைப் பொருட்படுத்தாத பாவமனங் காரணமாக, மறிந்து விழும் நரகுக்கு உறவாய மனிதரைப் பிறிந்தேன்—தலைகீழாய் விழும் நரகக்குழிக்குச் சம்பந்தமாகிய மனிதர்களது சகவாசத்தை விட்டுப்பிரிந்தேன், (அவ்வாறு பிரிந்து கொண்டு,) வெருவி உனது திருவடிக்கே செறிந்தேன்— பிறவிநோய்க்கஞ்சித் தேவரீருடைய திருவடிகளுக்கே புகலடைந்தேன். எ - று.

மறை-இரட்டுறமொழிதல், வெருவி என்பதனை ஊசற்பொருள்கோளாகக் கொண்டு பிறிந்தேன் என்பதனோடு மொட்டுக.

அபிராமிதேவியே, தேவரீருடைய திருவருள்வாயிலாக முதலில் வேதரகசியத்தை அறிந்து, இடையில் அதற்கு விக்

கினமாகிய அறிவிலிகளின் சகவாசத்தை யொழித்து, முடிவில் அதன் பயனுக்த் தேவரீருடைய திருவடிகளையே சரணடைந்தேன் என்பதாம். (3)

மனிதருந் தேவரு மாயா முனிவரும் வந்துசென்னி
குனிதருஞ் சேவடிக் கோமள மேகொன்றை வார்சடைமேற்
பனிதருந் திங்களும் பாம்பும் பகிரதி யும்படைத்த
புனிதரும் நீயுமென் புந்தியெந் நாளும் பொருந்துகவே.

இ – ள்: மனிதரும் — மானுடர்களும், தேவரும் — தேவர்களும், மாயா முனிவரும்— அவ்விருவகையினரும் போல மயங்காத விருடிகளும், வந்து சென்னி குனிதரும் சேவடிக் கோமளமே—சந்நிதியில் வந்து சிரசைத் தாழ்த்தி வணங்கும் சிவந்த திருவடிகளையுடைய இளமைச் செவ்வி வாய்ந்த அபிராமிதேவியே, கொன்றைவார் சடைமேல்— கொன்றைமாலையைத் தரித்த நீண்ட திருச்சடையின் மீது— பனிதரும் திங்களும்—குளிர்ச்சி பொருந்திய பாலசந்திரனையும், பாம்பும்—பாம்பையும், பகிரதியும்— கங்காசலத்தையும், படைத்த புனிதரும்—தாங்கியருளிய பரிசுத்தராகிய சிவபெருமானும், நீயும்—பரிசுத்தையாகிய தேவரீரும், என் புந்தி எந்நாளும் பொருந்துக—தமியேனது மனத்தில் எக்காலத்தும் தியானப்பொருளாக எழுந்தருளியிருக்குக. எ—று (4)

பொருந்திய முப்புரை செப்புரை செய்யும் புணர்முலையால்
வருந்திய வஞ்சி மருங்குன் மனோன்மனி வார்சடையோ
னருந்திய நஞ்சமு தாக்கிய வம்பிகை யம்புயமேற்
றிருந்திய சுந்தரி யந்தரி பாதமென் சென்னியதே.

இ - ள்: பொருந்திய முப்புரை—உயிருக்கு ஆதாரமாகப் பொருந்திய தூல சூக்கும காரணமென்னும் மூவகை

உடம்புகளினும் வியாபித்திருக்கும் திரோதானசக்தியும், செப்பு உரை செய்யும் புணர்முலையால் வருந்திய வஞ்சி பருங்கல் மனோன்மனி — மாணிக்கரத்தினச் செப்பைப் புலவர் நிகர்சொல்லும் சர்க்கிடை புகப்பெருது தம்மு ணெருங்கிய பர அபர ஞானங்களாகிய இரு திருமுலைகளின் பாரத்தினால் வருந்துகின்ற கொடிபோலும் இடையினை யுடைய மனோன்மனியும், வார் சடையோன் அருந்திய நஞ்சு அமுது ஆக்கிய அம்பிகை —நீண்ட சடையையுடைய சிவபெருமான் உண்டருளிய ஆலகாலவிஷத்தைத் தமது திருக்கரங்களாற் பரிசித்து அமுதமாகச் செய்தருளிய உமையும், அந்தரி சிதாகாசரூபியாகிய பராசத்தியு மாகிய, சுந்தரி — அபிராமிதேவியினது, அம்புயமேல் திருந்திய பாதம்—செந்தாமரை மலரினும் மேலாக அழகு திருந்திய திருவடி, என் சென்னியது—தமியேனது சிரசின் கண்ணது. எ—று.

சூக்குமசரீரமாவது தன்மாத்திரைகளைந்தும் மனம் புத்தி அகங்காரங்களாகிய அந்தக்கரணங்கள் மூன்றுமான எட்டின் சமுதாயமாம். இது பிராணமயகோசம் எனவும்படும். காரணசரீரமாவது மாயையில் அனந்ததேவராற் கலக்குண்டபாகம். இது ஆனந்தமயகோசம் எனவும்படும்.

மனோன்மனி-மனசின் உன்முகமாயிருப்பவள். உன் முகம் – மேனோக்கம். (5)

சென்னிய துன்பொற் றிருவடித் தாமரை சிந்தையுள்ளே
மன்னிய துன்றிரு மந்திரஞ் சிந்துர வண்ணப்பெண்ணே
முன்னிய நின்னடி யாருடன் கூடி முறைமுறையே
பன்னிய தென்றுமுன் றன்பர மாகம பத்ததியே.

இ-ள்: சிந்துர வண்ணப்பெண்ணே — செந்நிறம் பொருந்திய திருமேனியையுடைய அபிராமிதேவியே,

உன் திருவடிப்பொன்தாமரை சென்னியது—தேவரீருடைய திருவடிப்பொற்றமரைமலர் என் சிரசிற் கரோடியாக இருக்கின்றது, உன் திருமந்திரம் சிந்தையுள்ளே மன்னியது—தேவரீருடைய திருமூலமந்திரம் தமியேனது மனத்தின்கண்ணே தியானப்பொருளாக நிலைபெற்றிருக்கின்றது, உன் பரம ஆகமபத்ததி—தேவரீரது மேலாகிய ஆகம பத்ததி, முன்னிய நின் அடியாருடன் கூடி முறை முறை என்றும் பன்னியது—நன்குமதிக்கப்படுகின்ற தேவரீருடைய மெய்த்திருத்தொண்டர்களோடு கூடி ஆராய்ச்சி செய்து பலமுறை தமியேனுற் படிக்கப்பட்டது. எ-று.

என்றும் என்பதனை ஏனை இரண்டிடத்தும் கூட்டிப்பொருளுரைத்துக்கொள்க. தாமரை ஆகுபெயர். உன்றன் பரமாகமபத்ததி என்றது, சாத்தேயாகமபத்ததியை; சிவாகம பத்ததி எனினும் பொருந்தும்; யாமளவேதபத்ததி யென்பாருமுளர். கரோடி - முடிமாலை.

தமியேனது மனம் வாக்குக் காயமென்னும் திரிகரணங்களும் சதாகாலமும் தேவரீரையே வழிபடப்பெற்றன என்பதாம். (6)

ததியுறு மத்திற் சுழலுமென் னாவி தளர்விலதோர்
கதியுறு வண்ணங் கருதுகண் டாய்கம லாலயனு
மதியுறு வேணி மகிழ்நனும் மாலும் வணங்கிஎன்றுந்
துதியுறு சேவடி யாய்சிந்து ரானன சுந்தரியே.

இ-ள்: கமல ஆலயனும்—செந்தாமரைமலரைக் கோயிலாகவுடைய பிரமாவும், மதி உறு வேணி மகிழ்நனும்—பாலசந்திரன் பொருந்துஞ் சடையையுடைய நாயகராகிய சிவபெருமானும், மாலும்—திருமாலும்; என்றும் வணங்கித் துதியுறு சேவடியாய்—எக்காலத்தும் வணங்கித் துதிக்கும் சிவந்த திருவடிகளையுடையவரே, சிந்துர ஆனன

சுந்தரியே—சிந்தூர திலகம் பொருந்திய திருமுகத்தை யுடைய அபிராமிதேவியே, மத்து உறு ததியில் சுழலும் என் ஆவி—மனத்தினாற் கடையப்படும் தயிரைப்போலச் சனன மரணங்களிற் பட்டுச் சுழலுகின்ற தமியேனது உயிர், தளர்வு இலது ஓர் கதி உறு வண்ணம் கருது—அங்ஙனம் பிறந்திறந்து தளர்வுறுதலிலதாகிய ஒப்பற்ற சிவகதியை அடையும்வண்ணம் தேவரீர் திருவுளங் கொண்டருளும். எ - று.

கண்டாய் என்பது முன்னிலையசை.

சிவகதி-மோக்ஷம். ''மத்துறு தண்டரியிற் புலன்றீக்கது வக்கலங்கி—வித்துறுவேனை விடுதி கண்டாய்'' என்றார் பிறரும். ''சிவஞ்சத்தி தன்னையீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்றும்'' என்பவாகலின், மகிழ்நர் வணக்கமும் ஈண்டுக் கூறப்பட்டதென வுய்த்துணர்ந்து கொள்க.

மும்மூர்த்திகளும் வணங்கும் அபிராமிதேவியே, சனன மரணங்களிற்பட்டுத் திரிலோகங்களினும் சுழன்று திரியும் தமியேன் பரமுத்தியடையும் வண்ணம் திருவுளங்கொண்டருளும் என்பதாம். (7)

சுந்தரி யெந்தை துணைவியென் பாசத் தொடரையெல்லாம்
வந்தரி சிந்துர வண்ணத்தி னாண்மகி டன்தலைமேல்
அந்தரி நீலி யழியாத கன்னிகை யாரணத்தோன்
கந்தரி கைத்தலத் தாள்மலர்த் தாளென் கருத்தனவே.

இ-ள்: என் பாசத் தொடரை எல்லாம் வந்து அரி சிந்துர வண்ணத்தினாள்—பாவியேனது பஞ்சபாசங்களையும் தாமே யெழுந்தருளி வந்து சேதிக்கின்ற செந்நிறத்தை யுடையவரும், மகிடன் தலைமேல் அந்தரி—மகிடாசுரனது சிரசின்மீது அந்தரத்தைச் செய்தவரும், நீலி — நீல நிறத்தையுடையவரும், அழியாத கன்னிகை — நித்திய

கன்னிகையும், ஆரணத்தோன் கம் தரி கைத்தலத்தாள்-பிரமாவினது கபாலத்தைத் தரித்த திருக்கரத்தையுடைய வரும், எந்தை துணைவி — எம்பரமபிதாவாகிய அமுத கடேசரது சத்தியுமாகிய, சுந்தரி தாள் மலர் — அபிராமி தேவியினுடைய திருவடித் தாமரைமலர்கள், என்கருத்தன—தமியேனது தியானத்திற் சதாகாலமும் உள்ளன. எ - று.

பாசத்தொடர் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. அரிதல் இலக்கணை. அந்தரம்-தீமை; என்றது, ஈண்டுக் கொலைத்தீமையை. கம்-தலை. (8)

கருத்தன வெந்தைதன் கண்ணன வண்ணக் கனகவெற்பிற்
பெருத்தன பாலழும் பிள்ளைக்கு நல்கின பேரருள்கூர்
திருத்தன பாரமும் ஆரமுஞ் செங்கைச் சிலையுமம்பும்
முருத்தன மூரலும் நீயுமம் மேவந்தென் முன்னிற்கவே.

இ - ள்: எந்தை தன் கருத்தன — எம் பரமபிதாவாகிய சிவபெருமானுடைய திருவுள்ளத்தின் கணுள்ளனவும், கண்ணன—அவர் திருக்கண்களுளுள்ளனவும், கனகவண்ண வெற்பில் பெருத்தன—பொன்வண்ணமாகிய மேரு மலையைப்போலப் பருத்தனவும், அழும் பிள்ளைக்குப் பால் நல்கின — தேம்பித்தேம்பி யழுத சீர்காழிப்பிள்ளையாருக்கு ஞானப்பால் கொடுத்தனவுமாகிய, பேர் அருள் கூர் திருத்தனபாரமும்—பேரருள் புரியும் இரு திருத்தனபாரங்களும், ஆரமும்—அவற்றின்மீது தங்கிய முத்துமாலையும், செங்கைச்சிலையும்—சிவந்த திருக்கரத்திற் பொருந்திய கருப்பு வில்லும், அம்பும்—புஷ்பபாணங்களும், முருத்து அன மூரலும்—மயிலிறகினடிபோலும் திருநகையுமாக, அம்மே உலகமாதாவே! நீயும்—அபிராமிதேவியாகிய தேவரீரும்

சகப்பிதாவாகிய சிவபெருமானும், வந்து என் முன் நிற்க—மரணகாலத்தில் எழுந்தருளிவந்து தமியேன் முன் நின்று காட்சி தந்தருளுக. எ - று.

முருந்து முருத்தென விகாரமாயிற்று. நீயுமென்னு மும்மை எச்சவும்மையாகலானும், தேவியை அம்மே என்ற தனுலும் சகப்பிதாவாகிய சிவபெருமான் என்பது வருவிக்கப்பட்டது. ஏனைய எண்ணும்மைகள்.

உலகமாதாவே ! தேவரீர் உருவத்திருமேனிகொண்டு சிவபெருமானுடன் தமியேனது மரணகாலத்தில் எழுந்தருளி வந்து தரிசனந் தந்தருளுக என்பதாம். (9)

நின்று மிருந்துங் கிடந்தும் நடந்தும் நினைப்பதுன்னை
என்றும் வணங்குவ துன்மலர்த் தாளெழு தாமறையின்
ஒன்று மரும்பொரு ளேயரு ளேயுமையே யிமயத்
தன்றும் பிறந்தவ ளேயழி யாமுத்தி யானந்தமே.

இ - ள் : எழுதா மறையின் ஒன்றும் அரும் பொருளே—எழுதா மறையாகிய வேதத்தின் முடிவிற் பொருந்தும் அறிதற்கரிய அர்த்தமாயுள்ளவரே, அருளே — சிவபெருமானுடைய திருவருண் மயமாயுள்ளவரே, உமையே—உமாதேவியே! அன்று இமயத்துப் பிறந்தவளே—தாக்ஷாயணி யென்னும் நாமத்தை நீக்கிக்கொள்ளும் அக்காலத்து இமயமலையிற் குழந்தைவடிவாகச் சென்றெழுந்தருளி வளர்ந்தவரே, அழியா முத்தி ஆனந்தமே — அடைந்தவர் திரும்பிப்பிறவாத மோக்ஷானந்தமான அபிராமி தேவியே! நின்றும்—தமியேன் நிற்கும்போதும், இருந்தும் - இருக்கும்போதும், கிடந்தும்—கிடக்கும் போதும், நடந்தும்—நடக்கும்போதும், நினைப்பது உன்னை—தியா

ளிப்பது தேவரீரையே, என்றும் வணங்குவது உன் மலர்த் தாள்—எக்காலத்தும் நமஸ்காரம் செய்வது தேவரீருடைய செந்தாமரை மலர்போலும் திருவடிகளையே- எ - று.

எண்ணுமைகள் வினையொடு வந்தன ; "வினையொடு வரினுமெண் ணினைய வேற்பன" என்பதனுற் கொள்க. பிரிநிலை எகாரங்கள் விகாரத்தாற் ருெக்கன. உம் அசை நிலை. இனம் பற்றித் தமியேன் என்றுந் தோத்திரஞ் செய் வதும் தேவரீரையேயென வருவித்துக் கொள்க. (10)

ஆனந்த மாயென் னறிவாய் நிறைந்த வமுதமுமாய்
வானந்த மான வடிவுடை யாண் மறை நான்கினுக்குந்
தானந்த மான சரணு ர விந்தந் தவளநிறக்
கானந்த மாடரங் காமெம்பி ரான்முடிக் கண்ணியதே.

இ - ள்: வான் அந்தம் ஆன வடிவு உடையாள்—பிருதிவிமுதல் ஆகாயபரியந்தமாகிய ஐம்பெரும் பூதங் களைத் தமக்கு வடிவமாகவுடைய அபிராமி தேவியினது, என் ஆனந்தமாய்—தமியேனுக்கு மோக்ஷானந்தமாகியும், அறிவாய்—பேரறிவாகியும், நிறைந்த அமுதமுமாய்—உள் ளத்தின்கண் நிறைந்த அமுதமுமாகியும், மறை நான்கினுக் கும் தான் அந்தம் ஆன சரண அரவிந்தம்—நான்கு வேதங்களுக்கும் தானென்றே முடிவாயுமிருக்கின்ற திரு வடிவத்தாமரை மலர், தவள நிறக் கானம் தம் ஆடு அரங்காம் எம்பிரான் முடிக் கண்ணியது—திருவெண்காட் டைத் தம்முடைய நடனசாலை மாத்திரையாகக் கொண்டு திருக்கடவூரில் எழுந்தருளியிருக்கின்ற எம்முடைய அமுத கடேசுவரரது முடிமாலையாயுள்ளது. எ - று.

வடிவுடையாளது சரணாரவிந்தம் எம்பிரான் முடிக் கண்ணியதெனக் கூட்டுக. திருவெண்காடு சிவபெருமான் அகோரவீரபத்திர வடிவங்கொண்டு, (வடக்கு நோக்கி அகங்கரித்துக் கோரநடனந் தொடங்கிய காளிக்கெதிரே') தாம் தெற்குநோக்கி ஒருங்கு நின்று அகோர நடனஞ் செய்து அடக்கிய நடனஸ்தானமாகலின், தவள நிறக் கானம் தம் ஆடு அரங்காம் என்றார். ஈண்டு எம்பிரானென்றது அமுதகடேசுவரரை.

ஐம்பெரும் பூதவடிவையுடைய அபிராமி தேவியினது திருவடிமலரே அமுதகடேசுவரரது முடிமாலையாயுள்ளது என்பதாம். (11)

**கண்ணிய துன்புகழ் கற்றதுன் னாமங் கசிந்துபத்தி**
**பண்ணிய துன்னிரு பாதாம் புயத்திற் பகலிரவா**
**நண்ணிய துன்னை நயந்தோ ரவையத்து நான்முன்செய்த**
**புண்ணிய மேதென்னம் மேபுவி யேழையும் பூத்தவளே.**

இ-ள்: புவி ஏழையும் பூத்தவளே—ஏழுலகங்களையும் பெற்ற உலகமாதாவாகிய அபிராமிதேவியே! கண்ணியது உன் புகழ்—தமியேன் இம்மையிலே சிந்தித்தது உம்முடைய திருப்புகழையே, கற்றது உன் நாமம்—தமியேன் படித்தது உம்முடைய திருநாமங்களையே, கசிந்து பத்தி பண்ணியது உன் இரு பாத அம்புயத்தில்—தமியேன் மன முருகிப் பத்திசெய்தது உம்முடைய இரண்டு திருவடிகளையே,பகல் இரவு ஆ நண்ணியது உன்னை நயந்தோர் அவையத்து — தமியேன் பகலுமிரவுமாகச் சகவாசஞ் செய்தது உம்மை விரும்பிய மெய்யடியார்களது சபையின் கண்ணேயே, என் அம்மே நான் முன் செய்த புண்ணியம் ஏது—என்மாதாவே! இதற்குத் தமியேன் பூர்வசன்மங்களிலே செய்துகொண்ட சிவபுண்ணியம் யாது? அதனைச் சொல்லியருளுதிர். எ-று.

பிரிநிலை ஏகாரங்கள் விகாரத்தாற்றொக்கன. ஆக என்பது ஆ எனக் கடைக்குறைந்து நின்றதோர் செய்யுண்முடிபு.

என்மாதாவே ! தமியேன் இம்மையில் இவ்வாறு செய்தமைக்குக் காரணமான சிவபுண்ணியம் இன்னதென்று சொல்லியருளுதிராயின், இன்னும் அதனையே செய்வேன் என்பதாம். (12)

**பூத்தவ ளேபுவ னம்பதி னான்கையும் பூத்தவண்ணம்**
**காத்தவ ளேபின் கரந்தவ ளேகறைக் கண்டனுக்கு**
**மூத்தவ ளேயென்றும் மூவா முகுந்தற் கிளையவளே**
**மாத்தவ ளேயுன்னை யன்றிமற் றோர்தெய்வம் வந்திப்பதே**

இ - ள் : புவனம் பதினான்கையும் பூத்தவளே—பதினான்கு புவனங்களையும் பெருது பெற்றவரே! காத்தவளே—அவைகளைப் பாதுகாக்கின்றவரே! பின் பூத்த வண்ணம் கரந்தவளே—பின்பு அப்பெற்றபிரகாரம் அவற்றை ஒடுக்குபவரே! கறைக்கண்டனுக்கு மூத்தவளே—ஸ்ரீ கண்டபரமசிவனுக்கு மூத்தவரே! முகுந்தற்கு என்றும் மூவா இளையவளே—விட்டுணுவுக்கு எக்காலத்தும் மூத்தும், இளையவருமாயிருப்பவரே! மாத்தவளே — பெரிய தவத்தையுடைய அபிராமிதேவியே! உன்னை அன்றி மற்று ஓர் தெய்வம் வந்திப்பதே — (இச்செய்ந்நன்றி களை மறந்து) தேவரீரை யல்லது வேறொரு தெய்வத்தை வழிபடலாமா? எ - று.

கறைக்கண்டனுக்கு மூத்தமையை, "கனகமார்கவின் செய்மன்றில்" என மேற்காட்டிய பிரமாணத்துள்ளே "தாய்" என்றதனானு முணர்க. உற்பத்திக் கிரமத்தில், சத்தி தத்துவத்தினின்றும் சதாசிவதத்துவமும், அதினின்றும் மகேசுரதத்துவமும், அதினின்றும் சுத்தவித்தியா தத்துவமும் தோன்றினமையின், இங்ஙனம் கூறினர். மேல் வருவனவற்றிற்கும் ஈதொக்கும். செய்யா என்னும் வாய்

பாட்டு மூவா என்னும் வினையெச்சம் விளியுருபேற்று நின்ற இளையவள் என்னும் வினைக்குறிப்பு முற்றுப் பெயர் கொண்டது; சிறப்பும்மை வருவிக்கப்பட்டது. (13)

வந்திப் பவருன்னை வானவர் தானவ ரானவர்கள்
சிந்திப் பவர்நற் றிசைமுகர் நாரணர் சிந்தையுள்ளே
பந்திப் பவரழி யாப்பர மானந்தர் பாரிலுன்னைச்
சந்திப் பவர்க்கெளி தாமெம்பி ராட்டிநின் றண்ணளியே.

இ - ள்: எம்பிராட்டி — எம்முடைய தலைவியாகிய அபிராமிதேவியே! உன்னை வந்திப்பவர் வானவர் தானவர் ஆனவர்கள்—தேவரீரை மனம் வாக்குக் காயமென்னும் திரிகரணங்களாலும் வழிபடுவோர்கள் தேவரும் அசுரருமாகிய இருதிறத்தார்களுமேயாவர், சிந்திப்பவர் நல் திசை முகர் நாரணர்—தேவரீரை நிட்களங்கமாகிய மனத்தினாலே தியானஞ் செய்பவர்கள் நல்ல நான்கு முகங்களையுடைய பிரமாக்களும் விட்டுணுக்களுமேயாவர், சிந்தையுள் பந்திப்பவர் அழியாப் பரமானந்தர்—தேவரீரைச் சுத்தசைதன்னியமாகிய கயிற்றான் மனத்தறியிற் பிணிப்பவர் நித்திய சிவானந்தத்தையுடைய சிவயோகிகளே யாவராமாயினும், பாரில் உன்னைச் சந்திப்பவர்க்கு நின் தண்ணளி எளிது ஆம்—தேவரீரைப் பூமியிலுள்ள ஆலயங்கடோறும் சென்று தரிசிக்கும் மனிதர்களாகிய நம்மவர்களுக்குத் தேவரீருடைய திருவருளைத் தலைக்கூடுதல் எளிதாயிருந்தது. (இஃதென்னை ஆச்சரியம்.) எ - று.

ஒன்றற்கொன்றருமையுடைய வந்தித்தன் முதலிய மூவகை வழிபாடுகளையும் முறையே செய்யும் மூவகையினரினும், எளிமையுடைய சந்தித்தற்றொண்டு செய்யும் மனிதர்களாகிய நம்மவர்களுக்கே, தேவரீருடைய திருவருள் எளிதிற் கைகூடுவதாயிருந்தது, இஃதொரு வியப்பிருந்தபடி என்னை என்பதாம். (14)

தண்ணளிக் கென்றுமுன் னேபல கோடி தவங்கள் செய்தார்
மண்ணளிக் குஞ்செல்வ மோபெறு வார்மதி வானவர்தம்
விண்ணளிக் குஞ்செல் வமுமழி யாமுத்தி வீடுமன்றோ
பண்ணளிக் குஞ்சொற் பரிமள யாமளைப் பைங்கிளியே.

இ-ள்: பண் அளிக்கும் சொல் பரிமள யாமளைப் பைங்கிளியே—பண்களுக்கும் இனிமையைக் கொடுக்கும் மாதுரியச் சொற்களையும், இயற்கையாகிய பரிமளத்தையு முடைய பைங்கிளியாகிய அபிராமிதேவியே, தண்ணளிக்கு என்று முன்னே பலகோடி தவங்கள் செய்தார் — தேவரீருடைய தட்பமாகிய திருவருளைப் பெறுதற்கென்றே பூர்வசன்மங்களிலே அநேககோடி தவங்களைச்செய்த மெய் யடியார்கடாம், மண் அளிக்கும் செல்வமோ பெறுவார் — அத்திருவருளான் இம்மையிலே இந்நிலவுலகத்தைப் பாது காக்கும் அரசியற் செல்வம் ஒன்றைமாத்திரமா பெறுவார் கள், மதி வானவர் தம் விண் அளிக்கும் செல்வமும் — மறுமையிலே சூக்குமபுத்தியையுடைய தேவர்களது விண் ணுலகத்தைப் பாதுகாக்கும் பெருஞ் செல்வத்தையும், அழியா முத்தி வீடுமன்றோ (பெறுவார்)—அப்பாற் சதா முத்தியாகிய மோட்சத்தையுமன்றோ பெறுவார்கள். எ-று.

யாமளைப் பைங்கிளி - யாமளையாகிய பைங்கிளி. யாமளம்-பச்சைநிறம்; யாமளவேதத்திற் பேசப்பட்டவள் என்பாருமுளர்.

தேவரீரது திருவருளைப் பெற்றோர் இம்மை மறுமை வீடு என்னும் மூன்றையும் முறையானே ஒரு தலையாகப் பெறு வார் என்பதாம். (15)

கிளியே கிளைஞர் மனத்தே கிடந்து கிளர்ந்தொளிரும்
ஒளியே யொளிரு மொளிக்கிடமேயெண்ணி லொன்றுமில்லா
வெளியே வெளிமுதற் பூதங்க ளாகி விரிந்தவம்மே
அளியே னறிவள விற்கள வான ததிசயமே.

இ-ள்: கிளியே — பைங்கிளியே! கிளைஞர் மனத்தே கிடந்து கிளர்ந்து ஒளிரும் — ஒளியே நுந் துறவற வுறவின ராகிய மெய்படியார்களது இருதயத்தின்கட் சூக்குமமாய்க் கிடந்து பின்பு தூலமாய்ப் பிரகாசிக்கும் சுத்தசைதன்னிய ரூபியாயிருப்பவரே! ஒளிரும் ஒளிக்கு இடமே – அங்ஙனம் பிரகாசிக்கும் அச்சிவ சைதன்னியத்திற்கு முத்தித்தசையில் வேறோர் அறிவுப் பெருஞ்செல்வமாகும் சிவசைதன்னியத்துக்கு ஆதாரமாயிருப்பவரே! எண்ணில் ஒன்றும் இல்லா வெளியே - உண்மையைச் சிந்திக்கில் இவைகளுள் ஒன்றும் ஆகாத பரவெளியே ! வெளி முதல் பூதங்கள் ஆகி விரிந்த அம்மே - அங்ஙனம் அதிசூக்குமமாயினும், ஆகாய முதலிய மகாதூல பூதங்களாகி விரிந்திருக்கின்ற உலகமாதாவே! அளியேன் அறிவு அளவிற்கு அளவானது அதிசயமே — பொய்யடியவனுய எளியேனது சிற்றறிவின் பரிமாணத்திற்குப் பிரமாணமாகியது எவர்க்கும் ஆச்சரிய கரமேயாம். எ-று.

ஒளியைப் போறலின் ஒளியென்றார். சைதன்னியம் - அறிவு - ஞானிகளது மனதிகளுக்கு ஒருவாறெட்டியும் எட்டாத தேவரீர் என் சிற்றறிவுக்கு எட்டியது எவர்க்கும் அதிசயந் தருவதாயிற்று, என்பதாம். (16)

அதிசய மான வடிவுடை யாளர விந்தமெல்லாந்
துதிசய வானன சுந்தர வல்லி துணையிரதி
பதிசய மான தபசய மாகமுன் பார்த்தவர்தம்
மதிசய மாகவன் றேவாம பாகத்தை வவ்வியதே.

இ-ள்; அதிசயமான வடிவு உடையாள் – ஆச்சரிய கரமான திருமேனியையுடையவரும், அரவிந்தம் எல்லாம் துதி ஆனன சுந்தர சயவல்லி — தாமரை மலர்கள் எல்லாம் துதிக்கின்ற திருமுகசுந்தரத்தையுடைய இமயமலைக்

கொடியுமாகிய அபிராமிதேவி, துணை இரதிபதி சயமானது அபசயமாக முன்பார்த்தவர் தம்மதிசயமாக அன்றோ — தனக்குத் தானே இணையாகிய இரதிக்கு நாயகனாகிய மன்மதனது வெற்றியானது தோல்வியடைய, முன்னரே நெற்றிக் கண்ணாற் பார்த்தருளிய சிவபெருமானது புத்தி சிரணத்தை அடையும் பொருட்டாகவன்றோ, வாமபாகத்தை வவ்வியது— அவரது வாமபாகத்தைத் தாம் கவர்ந்துகொண்டருளியது. எ – று.

தமது வேலைக்காரனாகிய மன்மதன் பொருட்டுத் தமது நாயகராகிய சிவபெருமானது புத்தி குன்றும்படி அவரது வாமபாகத்தை வெளவிய அபிராமி தேவி தமதன்பனாகிய தமியேனுக்கு அநுக்கிரகஞ் செய்யாதொழியார் என்பதாம்.

பொற்றாமரை மலரையும் அகப்படுத்துக் கோடற்கு அரவிந்தமெல்லாம் என்றார். சையவல்லி எனற்பாலது சயவல்லி என நிலைமொழி போலியாய் நின்றது. சையம்– மலை. நான்காமடி 1ற் சமயம் - சிரணம். அது சக்தி குன்றுதல். அன்றோ என்பது பலரறிதேற்றம். தேவிக்கு மன்மதன் வேலைக்காரன். என்பதை.

அறைபெற் றிடுமித் திறமா னவெலா
முறைபெற் றிடுமென் னின்முடிந் திடுமோ
பிறைபெற் றிடுகின் றபெருஞ் சடையெம்
மிறைபெற் றிடுசத் தியியற் றிடுமே.''

என்பதனாலும், இந்நூலுள் 'துணையுந்தொழுந்தெய்வமும்' (உ) என்னும் முதற்குறிப்புடைய செய்யுள் முதலாகப் பரந்து வருவன பலவற்றானும் உய்த்துணர்க. (17)

வவ்விய பாகத் திறைவரும் நீயும் மகிழ்ந்திருக்கும்
செவ்வியு முங்கள் திருமணக் கோலமுஞ் சிந்தையுள்ளே
அவ்வியந் தீர்த்தென்னை ஆண்டபொற் பாதமு மாகிவந்து
வெவ்விய காலனென் மேல்வரும் போது வெளிநிற்கவே.

இ - ள்: வவ்விய பாகத்து இறைவரும் நீயும் மகிழ்ந்து இருக்கும் செவ்வியும் — அங்ஙனம் தேவரீரால் வலிதிற் கவர்ந்து கொள்ளப்பட்ட வாமபாகத்தையுடைய சிவபெருமானும் தேவரீரும் திருவுளமுவந்திருக்கும் அர்த்தநாரீசுர வடிவழகும், உங்கள் திருமணக்கோலமும் — உங்களுடைய திருமணக்கோலமாகிய வடிவழகும், என்னைச் சிந்தையுள் அவ்வியந்தீர்த்து ஆண்ட பொற்பாதமும் ஆகிவந்து — தமியேனை மனத்தின்கணுள்ள யான் எனதென்னுஞ் செருக்கை நீக்கி ஆட்கொண்டருளிய பொன்போலுந் திருவடிகளுமாகி இருவீரும் எழுந்தருளிவந்து, வெவ்விய காலன் என்மேல் வரும்போது வெளிநிற்க — கொடிய யமன் என்மேல் எதிர்த்துவரும் மரணகாலத்தில் வெளிப்பட்டு நின்று காட்சிதந்தருளுக. எ - று.

அவ்வியம் ஆகுபெயர். நீவிர் இருவீரும் மகிழ்ந்து ஒருங்கிருக்கும் அர்த்தநாரீசுர வடிவழகும், உங்கள் திருமணக் கோல வடிவழகும், என்மனத்தின்கண்ணுள்ள யானெனதென்னுஞ் செருக்கையறுத்துத் தமியேனை ஆட்கொண்டருளிய திருவடிகளுமாகி எழுந்தருளிவந்து என்மரண காலத்திற் காட்சிதந்து யமவேதனையை நீக்கிப் பாதுகாத்தருளுக என்பதாம்.

வெளிநின்ற நின்திரு மேனியைப் பார்த்தென் விழியுநெஞ்சும்
களிநின்ற வெள்ளங் கரைகண்ட தில்லை கருத்தினுள்ளே
தெளிநின்ற ஞானந் திகழ்கின்ற தென்ன திருவுளமோ
ஒளிநின்ற கோணங்க ளொன்பது மேவி யுறைபவளே.

இ-ள் : ஒளிகின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே — ஒளியோடு பொருந்தி நிலைபெற்றிருக்கின்ற நவகோணங்களிலும் விரும்பி எழுந்தருளியிருக்கின்ற அபிராமிதேவியே! வெளி நின்ற நின் திருமேனியைப்

பார்த்து — தியானுதிகளின் பொருட்டு உருவமாகி வெளிப்பட்டு நிற்கின்ற தேவரீரது திருமேனியைத் தரிசித்தமை காரணமாக, என் விழியும் நெஞ்சும் களிநின்ற வெள்ளம் கரைகண்டது இல்லை — தமியேனது கண்ணினுங் கருத்தினுங் களிகூர்ந்து நிலைபெறுகின்ற ஆநந்த வெள்ளத்திற்கு ஒரு கரையுங் காணப்பட்டதில்லை. (அங்ஙனமாகவும்) கருத்தின் உள்ளே தெளிநின்ற ஞானம் திகழ்கின்றது என்ன திருவுளமோ — என் கருத்தின் கண்ணே தெளிவு பொருந்தி நிற்கின்ற சிவஞானம் ஒருகாலைக்கொருகான் மீதூர்ந்து பிரகாசிக்கின்றது; இது என்ன திருவுளக்கருத்தேயோ! (அதனை அறிகின்றிலேன்) எ—று.

தேவிநவகோணங்களாவன — முதலில் ஒரு திரிகோணமும், அதன்மேல் அட்டகோணமும், அதன்மேல் தசகோணமும், அதன்மேல் மற்றொரு தசகோணமும், அதன்மேல் சதுர்த்தச கோணமும், அதன்மேல் அட்டதளமும் அதன்மேல் சோடசதளமும், அதன்மேல் விந்துத்திரயமும், அதன்மேல் சதுரச்சிரத்திரயமுமாம். இவற்றுட் சிவ கோணம் நான்கும், சத்திகோணம் ஐந்துமாம். சிவகோணம் நான்கும் கீழ்நோக்கியும் சத்திகோணம் ஐந்தும் மேனோக்கியும் தம்முட் புணர, மேற்கூறிய நாற்பத்து முக்கோணமும் உற்பத்தியாமெண அறிக. இவற்றின் உற்பத்திக்கிரமம் சங்காரக்கிரமங்களும், கௌளமத, சமயமத விகற்பங்களும், அக்ஷர அடைப்பும், கிரகமாலிகாகிரமமும், பிறவுமாகிய பரப்பெல்லாம் ஈண்டுவிரிக்கிற் பெருகுமாகலின். சனற்குமாரசங்கிதை முதலிய தந்திரங்களுட் குருமுகமாகப் பெற்றுய்த்துணர்ந்துகொள்க. இந்நவகோணங்களினும் தேவிவிசேஷவியாபகமாய் வீற்றிருத்தலின், ஒளிநின்ற கோணங்களொன்பது மேவியுறைபவளே என்றார். கரைகாணுதவழியும் ஞானந்திகழ்தற்குக் காரணம் திருவருளேயல்லது பிறிதில்லையென்பதாம். (19)

உறைகின்ற நின்றிருக் கோயில்நின் கேள்வ ரொருபக்கமோ
அறைகின்ற நான்மறை யின்னடி யோமுடி யோவமுதம்
நிறைகின்ற வெண்டிங்க ளோகஞ் சமோவென்றன்நெஞ்சகமோ
மறைகின்ற வாரிதி யோபூர ணாசல மங்கலையே.

இ-ள் :- பூரண அசல மங்கலையே — எங்கும் நிறைந்த நித்திய மங்கலையாகிய அபிராமிதேவியே! உறைகின்ற நின் திருக்கோயில் — தேவரீர் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோயிலானது. நின் கேள்வர் ஒரு பக்கமோ — நுப்பிராணநாயகராகிய சிவபெருமானது ஒரு பாகமோ அறைகின்ற நால் மறையின் அடியோ முடியோ — விதிவிலக்குக்களைப் பிரதிபாதிக்கின்ற நான்கு வேதங்களின் ஆதியந்தங்களோ, அமுதம் நிறைகின்ற வெண்திங்களோ — அமுதகலை நிறைகின்ற வெண்மையாகிய சந்திரமண்டலமோ, (வெண்) கஞ்சமோ — வெண்டாமரைமலரோ, மறைகின்ற வாரிதியோ — துருவாசமுனிவரது சாபத்தினால் இந்திரசம்பத்துக்கள் விழ்ந்து மறையப்பெற்ற பாற்கடலோ, என் நெஞ்சகமோ — அல்லது தமியேனது மனத்தின் உள்ளிடமோ. எ - று

வெண்டாமரைமலரிற் சரசுவதியாயும் பாற்கடலிற் செந்தாமரையாசனியாகிய மகாலக்குமியாயும் வீற்றிருப்பவராதலின், கஞ்சமோ, வாரிதியோ என்றார். திங்களின் வெண்மைப்பண்படை கஞ்சத்திற்குஞ் சேர்த்துப் பொருளுரைக்கப்பட்டது. அசலம் - சலனமற்றது; மலை எனினும் அமையும்.

சிவபெருமானுடைய வாமபாகம் முதலிய ஆறிடங்களைப்போல என் மனத்தையும் தேவரீர் கோயில்கொண்டருளினீர். அதற்குத்தமியேன் செய்யும் பிரதியுபகாரம் ஒன்றுமின்றென்பதாம். (20)

மங்கலை செங்கல சம்முலை யாள்மலை யாள்வருணச்
சங்கலை செங்கைச் சகல கலாமயில் தாவுகங்கை
பொங்கலை தங்கும் புரிசடை யோன்புடை யாளுடையாள்
பிங்கலை நீலிசெய் யாள்வெளி யாள்பசும் பெண்கொடியே.

இ-ள். மங்கலை - நித்திய சுமங்கலையும், செம்கலசம் முலையாள் — செம்மையாகிய மாணிக்கக் கலசம் போலும் திருமுலைகளையுடையவரும், மலையாள் — பார்ப்பதியும், வருணச் சங்கு அலை செங்கைச் சகல கலாமயில்— வெண்ணிறம் பொருந்திய சங்கவளையல்கள் அசைகின்ற செவ்விய கைகளையுடைய சர்வகலைகளுக்கும் அதிதெய்வ மாகிய ஒருவிசேட மயில்போல்பவரும், பொங்கு அலை தாவு கங்கை தங்கும் புரிசடையோன் புடையாள் — கிளரு கின்ற அலைகள் தவழும் கங்காசலம் தங்குகின்ற முறுகிய சடையையுடைய சிவபெருமானது வாமபாகமாயிருப் பவரும், உடையாள் — தமியேனை அநாதியே அடிமையாக உடையவருமாகிய, பசும் பெண்கொடி — பச்சைப்பெண் கொடியாயுள்ள அபிராமிதேவி, பிங்கலை—பொன்வர்ணத் தை யுடையவரும், நீலி—நீலவர்ணத்தையுடையவரும், செய்யாள் — செந்நிறத்தையுடையவரும், வெளியாள்— வெண்ணிறமுடையவரும் (ஆவர்) எ-று.

புடையாளுடையாள் என்பதற்கு வாமபாகத்தை ஆளுதலுடையவர் எனப் பொருள் கூறினும் பொருந்தும். மங்கலையென்றது அபிராமிதேவியை. நீலி என்றது துர்க் கையை. செய்யாள் என்றது மகாலக்குமியை. வெளியாள் என்றது சரஸ்வதியை. பசும் பெண்கொடி என்றது உமையை. இனிப் பசும் பெண்கொடியாகிய உமையாள் என்னுஞ் சிவசத்தியே மங்கலையாகிய பிங்கலையும், மலையா ளாகிய நீலியும், செங்கலசமுலையாளாகிய செய்யாளும்,

சகலகலாமயிலாகிய வெளியாளும் ஆவர் எனக்கொண்டு கூட்டிப் பொருள் கோடலும் ஒன்று.

அபிராமிதேவி பலசத்திபேதங்களு மாயிருப்பவராகலிற் பஞ்ச வர்ணங்களுமுடையவராவர் என்பதாம். (21)

கொடியே யிளவஞ்சிக் கொம்பே யெனக்குவம் பேபழுத்த
படியே மறையின் பரிமள மேபனி மாலிமயப்
பிடியே பிரமன் முதலாய தேவரைப் பெற்றவம்மே
அடியே னிறந்திங் கினிப்பிற வாமல்வந் தாண்டுகொள்ளே

இ-ள்:– இளவஞ்சிக் கொடியே – இளமையாகிய வஞ்சிக் கொடியே! கொம்பே - பொற்கொம்பரே! எனக்கு வம்பே பழுத்தபடியே — அபக்குவனாகிய தமியேனுக்கு அகாலத்திற் பழுத்த அருட்கனியின் பிரகாரமே! மறையின் பரிமளமே! பனி மால் இமயப் பிடியே – கைலை மலைக்களிறு தழுவும் குளிர்ச்சிபொருந்திய பெரிய இமயா சலப்பிடியே! பிரமன் முதலாய தேவரைப் பெற்ற அம்மே – பிரமாமுதலாகிய தேவர்களைப் பெற்ற உலக மாதாவாகிய அபிராமிதேவியே! அடியேன் இனி இறந்து பிறவாமல் இங்கு வந்து ஆண்டுகொள் - ஒன்றுக்கும் பற்றாத புழுத்தநாயினுங்கடையேனாகிய அடியேன் இனி இறந்து பிறவாவண்ணம் ஈண்டெழுந்தருளிவந்து தடுத்தாட் கொண்டு முத்தி தந்தருளும். எ - று

படிவமே எனற்பாலது ஈறுகெட்டுப் படியே என நின்றது எனக்கொள்ளினுமமையும். கொடி கொம்பு முதலிய உருவகங்களை உவமையாகக் கோடலும் ஒன்று.

அபிராமிதேவியே! தேவரீர் எழுந்தருளிவந்து அடியேன் இனி இறந்து பிறவாவண்ணம் தடுத்தாட்கொண்டு மோக்ஷம் தந்தருளும் என்பதாம். (22)

கொள்ளேன் மனத்தினின் கோலமல் லாதன்பர் கூட்டந்தன்னை
விள்ளேன் பரசம யம்விரும் பேன்வியன் மூவுலகுக்
குள்ளேய னைத்திறுக் கும்புறம் பேயுள்ளத் தேவிளைந்த
கள்ளே களிக்குங் களியே யளியவென் கண்மணியே.

இ-ள் வியன் மூ உலகுக்கு உள்ளே — பெரிய மூன்றுல கத்திற்கும் உள்ளிடத்திலும், அனைத்திறுக்கும் புறம்பே — அவையனைத்திறுக்கும் வெளியிடத்திலும், உள்ளத்தே — என் இருதயகமலத்திலும், விளைந்த கள்ளே — முறுகித் ததித்து விளைந்த ஆனந்தமதுவே! களிக்கு களியே — மெய்யன்பர் கள்கூரும் பத்திரசக்களிப்பே! அளிய என் கண்மணியே — எளியேனது கண்ணினுண்மணியாகிய அபி ராமிதேவியே! மனத்தில் நின்கோலம் அல்லாது கொள் ளேன் — என் இருதயத்தில் தேவரீருடைய திருமேனியை அல்லது பிறிதொருமேனியை உட்கொள்ளேன், (நின்) அன்பர் கூட்டம் தன்னை விள்ளேன் — தேவ ரீருடைய மெய்யன்பர் குழுவை விட்டுப் பிரியேன், பர சமயம் விரும்பேன் — பரசமயங்களை விரும்பேன். (திரு வருள்செய்க.) எ - று.

இவ்வெதிர்மறை நிச்சயங்கண் மூன்றினும் திறம்பா திருக்கும் பொருட்டுத் தமியேனுக்குத் திருவருள்செய்க என்பதாம். (23)

மணியே மணியி னொளியே யொளிரு மணிபுனைந்த
அணியே யணியு மணிக்கழ கேயணு காதவர்க்குப்
பிணியே பிணிக்கு மருந்தே அமரர் பெருவிருந்தே
பணியேன் ஒருவரை நின்பத்ம பாதம் பணிந்தபின்னே.

இ-ள் மணியே — மாணிக்கமணி போல்பவரே! மணியின் ஒளியே — அம்மாணிக்கமணியின் ஒளிபோல் பவரே! ஒளிரும் மணிபுனைந்த அணியே — பிரகாசிக்கும்

அம்மாணிக்கமணிகள் இழைக்கப்பெற்ற ஆபரணம்போல் பவரே! அணியும் அணிக்கு அழகே — அணிந்த அவ் வாபரணங்களுக்கு அழகாயிருப்பவரே! அணுகாதவர்க் குப் பிணியே — புகலடையாத அபக்குவர்களுக்குப் பிணி போன்றவரே! பிணிக்கு மருந்தே — புகலடைந்த பக்கு வர்களது பிறவிப் பிணிக்கு அதனையோட்டும் பரம ஔடதமா யுள்ளவரே! அமரர் பெருவிருந்தே — அதிபரிபக்குவர்க ளாகிய தேவர்களுக்கு நல்விருந்தாகிய அபிராமிதேவியே! நின் பத்ம பாதம் பணிந்த பின் ஒருவரைப் பணியேன் — இப் பெருஞ்சிறப்புக்கள் வாய்ந்த தேவரீரது உபய அருமைத்திருவடிப் பொற்கமலங்களை வணங்கியபின் வேறொருவரையுந் தமியேன் வணங்கமாட்டேன். (இஃதே என் துணிபு.) எ - று.

அபிராமிதேவியே! இப்பெருஞ்சிறப்புக்கள் வாய்ந்த தேவரீருடைய உபய அருமைத் திருவடிப்பொற்கமலங்களை யல்லது இனி வேறொரு கடவுளை வணங்கேன். திருவருள் செய்க என்பதாம். (21)

பின்னே திரிந்துன் னடியாரைப் பேணிப் பிறப்பறுக்க
முன்னே தவங்கள் முயன்றுகொண் டேன்முதன் மூவருக்கும்
அன்னே யுலகுக் கபிராமி யென்னு மருமருந்தே
என்னே யினியுன்னை யான்மறவா மல்நின் றேத்துவனே.

இ - ள்:- முதல் மூவருக்கும் அன்னே — முத்தொழில் முதன்மையையுடைய மும்மூர்த்திகளுக்கும் மாதாவே! உலகுக்கு அபிராமி என்னும் அருமருந்தே — மூன்றுலகத் திற்கும் அபிராமிதேவியென்று பிறிதோர் நாமம் படைத்த பெறுதற்கரிய தேவாமிர்தமே! உன் அடியார் பின்னே திரிந்து பேணி — உம்முடைய மெய்யடியார்களது பின்னாகவே

திரிந்து அவர்களை வழிபட்டு, பிறப்பு அறுக்க முன்னே தவங்கள் முயன்று கொண்டேன் — சனன நோயாகிய வலையை யறுக்கப் பூர்வசன்மங்களிலே சிவ புண்ணியங்களாகிய வாட்படைகளை முயன்று செய்து கொண்டேன், யான் உன்னை மறவாமல் நின்று ஏத்துவன் - தமியேன் அத்தவங் காரணமாகத் தேவரீரை இம்மையிலே நினைவொழியாது நின்று (வணங்கித்) தோத்திரஞ்செய் வேன், இனி என்னே — இனி எனக்கென்ன குறையுண்டு, எ - று.

அபிராமிதேவியே! பூர்வசன்மங்களிலே உம்முடைய மெய்யடியார்களை வழிபட்ட தவத்தான் இம்மையிலே தேவரீரை வழிபாடு செய்யப்பெறுபவனாகிய தமியேனுக்கு இனி ஒரு குறையுமில்லை என்பதாம். (25)

ஏத்து மடியவ ரீரேழு உலகினை யும்படைத்தும்
காத்து மழித்துந் திரிபவ ராங்கமழ் பூங்கடம்பு
சாத்துங் குழலணங் கேமண நாறுநின் தாளிணைக்கென்
நாத்தங்கு புன்மொழி யேறிய வாறு நகையுடைத்தே.

இ - ள் கடம்புப் பூ சாத்தும் குழல் அணங்கே — நறுமணங் கமழும் கடப்பமலர்மாலையைத் தரித்தருளும் கூந்தலையுடைய அபிராமிதேவியே! ஏத்தும் அடியவர் — தேவரீருடைய திருவடிகளைத் துதிக்கும் மெய்யடியார்கள், ஈரேழுலகினையும் படைத்தும் காத்தும் அழித்தும் திரிபவராம் — பதினான்குலகங்களையும் சிருட்டித்தும் திதித்தும் சங்கரித்தும் திரியும் மும்மூர்த்திகளும் ஆவ ரெனினும், மணம் நாறும் நின் தாள் இணைக்கு — நறுமணங் கமழும் தேவரீருடைய உபய திருவடித் தாமரை மலர்களுக் குச் சாத்தப்படும்பொருட்டு, என் நாத்தங்கு புன்மொழி

ஏறியவாறு—புழுத்த நாயினும் கடையேனாகிய தமியேனது நாவினின்றும் தோன்றிய இவ்வந்தாதியாகிய பாமாலை தேவரீரது திருச்செவிகளுக்கேறிய பிரகாரம், நகை உடைத்து—எவர்க்குஞ் சிரிப்புக்கிடமாதலை யுடைத்தா யிற்று. எ-று.

இறப்பவுஞ் சிறந்த தேவரீரது பெருமையை நோக்குங் கால், இப்புன்னூற்பாமாலையும் தேவரீருடைய திருவடி களுக்குச் சாத்தப்படும்பொருட்டுத் திருச்செவிக்கேறுமாறு யாங்ஙனமென எவர்க்குஞ் சிரிப்புக்கிடமாயிற்று. மனித கதியினர் நும்மெய்யடியாராயவழித் தேவகதியுட்சிறந்த மும்மூர்த்திகளாதலை அவர் அறிந்திலர் போலும் என்ப தாம். (26)

உடைத்தனை வஞ்சப் பிறவியை யுள்ள முருகுமன்பு
படைத்தனை பத்ம பதயுகஞ் சூடும் பணியெனக்கே
அடைத்தனை நெஞ்சத் தழுக்கையெல் லாநின் னருட்புனலால்
துடைத்தனை சுந்தரி நின்னரு ளேதென்று சொல்லுவதே.

இ-ள். சுந்தரி—அபிராமிதேவியே! பத்ம பதயுகம் சூடும் பணி எனக்கே அடைத்தனை—உம்முடைய உபய திருவடிப் பொற்கமலமலர்களைச் சிரசிற் சூடும் திருத் தொண்டை எனக்கே வரையறுத்து நியதிசெய்தருளினீர், நெஞ்சத்து அழுக்கை எல்லாம் நின் அருள் புனலால் துடைத்தனை — அதுகாரணமாக என்மனத்தின் கணுள்ள மலமாசுகளையெல்லாம் நுங்கிருபாவெள்ளத்தினாற் பற்றறக் கழுவி யருளினீர், உள்ளம் உருகும் அன்பு படைத்தனை—அதனால் அம்மனம் நெக்குநெக்குருகுதற் கேதுவாகிய உண்மையன்பினை யுண்டாக்கி யருளினீர், வஞ்சப் பிறவியை உடைத்தனை—அதனால் மாயா சூழ்ச்சியையுடைய பிறவிக்கடற்கரையை உடைத்தருளினீர், நின் அருள்

ஏது என்று சொல்லுவது—இப்பெருதவிகள் புரிந்த தேவரீருடைய திருவருளைச் சிற்றறிவுஞ் சிறு தொழில்களையுமுடையதமியேன் யாதென்று சொல்லிப் புகழ்வது எ-று.

செய்யுளாகலின், முறைபிறழக் கூறினர்.

அபிராமிதேவியே! சகலனாகிய தமியேனது அபரிபக்குவமிகுதியைக்கண்டு, சனனங்கடோறும் சிறிதுசிறிதாகப் பரிபக்குவஞ் செய்து, ஈண்டு மோக்ஷ சாம்பிராச்சியத்தைப் பெறுதற்குப் பூரணபக்குவமுஞ் செய்தருளிய தேவரீரைத் துதித்தற்கு அத்துணைச் சிறந்த சொல்லும் பொருளும் யாண்டைய என்பதாம். (27

சொல்லும் பொருளு மெனநட மாடுந் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடி யேநின் புதுமலர்த்தாள்
அல்லும் பகலுந் தொழுமவர்க் கேயழி யாவரசும்
செல்லுந் தவநெறி யுஞ்சிவ லோகமுஞ் சித்திக்குமே.

இ-ள், நடம் ஆடும் துணைவருடன் சொல்லும் பொருளும் எனப் புல்லும் பரிமளப் பூங்கொடியே—பஞ்சகிருத்திய நடனஞ் செய்தருளும் நும்பிராணநாயகராகிய சிவபெருமானோடு சொல்லையும் அதன் பொருளையும் போலப் பேதாபேதமாய்த் தழுவும் இயற்கை நறுமணங் கமழும் பூங்கொடியாகிய அபிராமிதேவியே! நின் புதுமலர்த்தாள் பகலும் அல்லும் தொழும் அவர்க்கே—தேவரீருடைய அன்றலர்ந்த செந்தாமரை மலர்போலும் திருவடிகளை அகோராத்திரம் வழிபடும் மெய்யடியார்களுக்கு மாத்திரமே, அழியா அரசும் செல்லும் தவநெறியும் சிவலோகமும் சித்திக்கும்—இடையிலழியாத அரசாட்சியும் இடையறாது நிகழும் தவவொழுக்கமும் சிவலோகபதப் பிராப்தியுமாகிய மூன்றும் ஒருதலையாகக் கிடைக்கும். எ-று.

அபிராமிதேவியே ! தேவரீரை வழிபடும் மெய்யடியார்களுக்கே இம்மை மறுமை வீடென்னும் மூன்றின் பயன்களும் முறையே கிடைக்கும் என்பதாம். எனவே ஏனையடியார்களுக்கு இவற்றுள் ஓரோவொன்றே கிடைக்கும் என்பதூஉம் பெற்றும். சிவலோகமாகிய பதமுத்தியைப் பெற்றவர்களுக்கு மகாசங்கார காலத்திலாவது, அல்லது அடுத்த ஓர் சனனத்திலாவது பரமுத்தி சித்தியாதொழியாதென்பது சிவாகம நூற்றுணிபாகலின், அத்துணிபு பற்றி, அச்சிவலோகம் ஈண்டுப் பரமுத்தியாகக் கொள்ளப்பட்டதென உய்த்துணர்ந்து கொள்க. (28)

சித்தியுஞ் சித்தி தருந்தெய்வ மாகித் திகழும்பரா
சத்தியுஞ் சத்தி தழைக்குஞ் சிவமுந் தவமுயல்வார்
முத்தியு முத்திக்கு வித்தும்வித் தாகி முளைத்தெழுந்த
புத்தியும் புத்தியி னுள்ளே புரக்கும் புரத்தையன்றே.

இ - ள் சித்தியும் — அணிமா முதலிய அட்டசித்திகளும், சித்திதரும் தெய்வம் ஆகித் திகழும் பராசக்தியும் — அவ்வட்டசித்திகளையும் வேதாந்த ஞானிகளுக்குக் கொடுக்கும் ஏனைத் தெய்வங்களாகி விளங்குகின்ற பராசக்தியும், சத்தி தழைக்கும் சிவமும் — அப்பராசக்தி ஏனைச் சத்திகளாய்க் கிளைத்தற்கேதுவாகிய பரமசிவமும், தவம் முயல்வார் முத்தியும் — அப்பரசிவத்தை நோக்கிச் சரியை கிரியை யோகங்களாகிய தவங்களை முயன்று செய்பவராகிய சைவசித்தாந்த ஞானிகள் அடையும் பரமுத்தியும், முத்திக்கு வித்தும் வித்து ஆகி முளைத்து எழுந்த புத்தியும் — அப்பரமுத்திக்கு விதைக்கும் விதையாகியோக நிலத்தில் அங்குரித்து முறுகி யெழுந்த சிவஞானமும், புத்தியின் உள்ளே புரக்கும் புரத்தை — ஆன்மபோதத்தினுள்ளே வியாபித்து நின்று நம்மைப் பெத்த முத்தியிரண்டினும் பாதுகாக்கும் திரிபுரசுந்தரியாகிய அபிராமிதேவியாம். எ - று.

"எத்திற நின்று னீசனத்திற மவளு நிற்பள்" என்ப வாகலின் சத்தி தழைக்குஞ் சிவமும் என்றார். வித்து மென்பது பெயரெச்சம். புரத்தை என்பது பொருண் முதலிய ஆறும் பற்றிவரும் ஐம்பாற் பெயர்களுள் இடம் பற்றி வந்த ஐகாரவீற்றுப் பெண்பாற் பெயர். வேதாந்தி கள் மாயாவாத வேதாந்திகளும், உபநிஷத்து வேதாந்தி களுமென இருதிறத்தினர். அவருள் உபநிஷத்து வேதாந்தி கள் சைவசித்தாந்திகளோ டொருபுடை யொப்பவராக லின், ஈண்டு வேதாந்தஞானிக ளென்றது மாயாவாத வேதாந்திகளையென உய்த்துணர்ந்து கொள்க. இணை மோனைப் பிராசநயம் பற்றி வந்த சொற்பொருட்பின் வரு நிலை என்னு மலங்காரம்.

இவ்வைவகையும் பிறவும் அபிராமிதேவியை இன்றி யமையாதன என்பதாம். (29)

அன்றே தடுத்தென்னை யாண்டுகொண்டாய் கொண்ட தல்ல
நன்றே யுனக்கினி நானென் செயினும் நடுக்கடலுட் [வென்கை
சென்றே விழினுங் கரையேற் றுகைநின் திருவுளமே
யொன்றே பலவுரு வேயரு வேயென் னுமையவளே.

இ-ள். ஒன்றே - ஏகரூபியே! பல உருவே—வெகு ரூபியே! அருவே—நிட்களையே! என் உமையவளே—ஏழை யாகிய தமியேனுக்குக் குலதெய்வமாயுள்ள சகளையாகிய அபிராமிதேவியே! என்னை அன்றே தடுத்து ஆண்டு கொண்டாய்—தமியேனை யாது தவம் பற்றியோ அன் றோர் தினத்திலே சொப்பனுவத்தையில் வெளிப்பட்டு வந்து தடுத்தாட்கொண்டருளினீர்! கொண்டது அல்ல என்கை உனக்கு நன்றே—அங்ஙனங் கொண்டருளியதை அல்லவென்று மறுத்தல் சிவகாருண்ணிய சமுத்திரமாகிய தேவரீருக்கு நல்லதாகுமா? ஆகாதென்றே, ஆகலான், நான் இனி என் செயினும்—தேவரீருக் கடிமையாகிய

தமியேன் இனி என்ன குற்றங்களைச் செய்யினும், கடல் நடு உள்ளே சென்று விழினும் — சமுத்திர மத்தியிலே சென்று வீழினும், கரை ஏற்றுகை நின் திருவுளமே — கருணைக் கையரல் எடுத்து முத்திக்கரையிலேற்றுதல் எசமாட்டியாகிய தேவரீருடைய திருவுளப்பாங்கேயாம். எ - று.

எசமாட்டியாகிய தேவரீர் அடிமையாகிய தமியேன் அபுத்தி பூர்வமாக என்ன குற்றங்களைச் செய்யினும், அவைகளைப் பொறுத்துக் கொண்டருளி மோஷம் தருதலே கடமை; அஃதொழிந்து எது செய்யினும் என்செயல் ஒன்று மின்றென்பதாம். (30)

உமையு முமையொரு பாகரு மேக வுருவில்வந்திங்(கு)
எமையுந் தமக்கன்பு செய்யவைத் தாரினி யெண்ணுதற்குச்
சமயங் களுமில்லை யின்றெடுப் பாளொரு தாயுமில்லை
அமையு மமையுறு தோளியர் மேல்வைத்த வாசையுமே.

இ - ள்; உமையும் உமையொருபாகரும் ஏக உருவில் இங்குவந்து — அபிராமிதேவியும் அவர் சமேதருமாகிய இவ ரிருவரும் அர்த்தநாரீசுவர வடிவமாகத் தமியேனது சொப்பனவத்தையின்கண் எழுந்தருளிவந்து (திருவடி தீஷைசெய்து) எமையும் தமக்கு அன்பு செய்ய வைத் தார்- ஒன்றுக்கும் பற்றாத புழுத்தநாயினும் கடையேமையும் தமக்கு மெய்யன்பு செய்யும்படி பத்திநிலையில் வைத்தருளி னார் ஆகலான், இனி எண்ணுதற்குச் சமயங்களும் இல்லை — இனி ஆராய்ச்சி செய்துகோடற்கு வேறு மெய்ச்சமயங்களு மில்லை, ஈன்று எடுப்பாள் ஒரு தாயும் இல்லை — என்னைப் பெற்றெடுப்பாளோர் தாயுமில்லை, அமையுறு தோளியர் மேல்வைத்த ஆசையும் அமையும் — பசிய மூங்கில் போலும் தோள்களையுடைய பெண்களின்மீது வைத்த காமாநுராக மும் எமக்குப் போதும் எ - று.

உமா என்னும் வடசொல் உமை எனத் தற்பவமா யிற்று: உயிர்களைக் காப்பவள் என்பது பொருள். இனி உ – ஓ பெண்ணே, மா - வேண்டாம், எனப்பொருள் கொண்டு பெண்ணே தவஞ்செய்ய வேண்டாம் என்னும், தாற்பரி யத்ததாகக் கோடலுமொன்று. உறு உவமவாசகம். "வேயுறு தோளிபங்கன்" என்பதனாலும் அறிக. சத்தி சிவமாகிய இவரிருவரும் அர்த்தநாரீசுவர வடிவமாக என் சொப்பனவத்தையில் எழுந்தருளிவந்து தீக்ஷித்து உபதே சித்தமையாற் பிறவிக்கு முக்கிய ஏதுவாகிய காமவிச்சை ஒருங்குகெடச் சமயசந்தேக நிவிர்த்தி பெற்றுச் சனன சம்பந்தமும் விட்டு நீங்கிற்று என்பதாம். (31)

ஆசைக் கடலி லகப்பட் டருளற்ற வந்தகன்கைப்
பாசத்தி லல்லற் படவிருந் தேனைநின் பாதமென்னும்
வாசக் கமலந் தலைமேல் வலியவைத் தாண்டுகொண்ட
நேசத்தை என்சொல்லு வேனீசர் பாகத்து நேரிழையே.

இ-ள் :- ஈசர் பாகத்து நேரிழையே – சிவபெருமானு டைய வாமபாகத்தின்கண் எழுந்தருளியிருக்கின்ற நேர் மையாகிய இழையினையுடைய அபிராமிதேவியே! ஆசைக்கடலில் அகப்பட்டு - அநுராகசமுத்திரத்திற் சிக் குண்டு. அருள் அற்ற அந்தகன் கைப்பாசத்தில் அல்லல் பட இருந்தேனை – சிவகாருண்ணியமற்ற யமனது கையின் கணுள்ள கடத்தற்கரிய பாசத்திற் கட்டுண்டு மரணத் துன் பத்தையும் நரகத்துன்பத்தையும் ஒருங்கநுபவிக்க எதிர் நோக்கியிருந்த தமியேனை. நின் பாதம் என்னும் வாசக் கமலம் தலைமேல்வைத்து வலிய ஆண்டு கொண்ட நேசத்தை என் சொல்லுவேன் — தேவரீருடைய வாசனை பொருந்திய திருவடித்தாமரைமலர்களை என் புன்றலைமேல் வலியவந்து சூட்டித் தடுத்தாட்கொண்டருளிய தலையன்பை என் னென்று சொல்லித் துதிப்பேன்? எ - று.

அபிராமிதேவியே! தேவரீர் வலியவந்து திருவடிதீக்ஷை செய்து தடுத்தாட்கொண்டருளிய பேருபகார நேயத்தைத் தமியேன் என் சிற்றறிவுகொண்டு சொற்பிரயோகஞ்செய்து துதிக்குமாறு யாண்டையது! என்பதாம். (32)

இழைக்கும் வினைவழி யேயடுங் கால னெனைநடுங்க
அழைக்கும் பொழுதுவந் தஞ்சலென் பாயத்தர் சித்தமெல்லாங்
குழைக்குங் களபக் குவிமுலை யாமளைக் கோமளமே
உழைக்கும் பொழுதுன்னை யேயன்னை யேயென்பனோடி வந்தே.

இ-ள். அத்தர் சித்தம் எல்லாம் குழைக்கும் களபக் குவிமுலை யாமளைக் கோமளமே — சகப்பிதாவாகிய பரமசிவனுடைய திருவுளமுழுவதையும் நெக்குநெக்குருகச் செய்யும் கலவைகளை யணிந்த குவிந்த திருமுலைகளையுடைய யாமளையாகிய இளமைச் செவ்வி பொருந்திய அபிராமிதேவியே! இழைக்கும் வினைவழியே அடும்காலன் எனை நடுங்கவந்து அழைக்கும்பொழுது உழைக்கும்பொழுது — தமியேன் பூர்வசன்மங்களிலே செய்துகொண்ட இருவினைகளின் வண்ணமே என்னைக் கொல்லும் யமன் யான் நடுங்குமாறு வந்து அழைக்குஞ்சமயத்தில் தமியேன் வருந்தும்போது, உன்னை அன்னையே என்பன் — தேவரீரைக் குறித்து மாதாவே உமக்கடைக்கலமென்று கூவுவேன், ஓடி வந்து அஞ்சல் என்பாய் - தேவரீர் அத்தருணம் கடுக எழுந்தருளி வந்து அஞ்சற்க என்று அபயமளித்தருளும். எ — று.

யாமளை — பச்சைநிறமுடையவள். தமியேன் மரணகாலத்திலே என்மாதாவே உமக்கடைக்கலமென்று தேவரீரைநோக்கிக் கூவுவேன், அத்தருணம் தேவரீர் கடுக எழுந்தருளிவந்து அஞ்சற்க என்று அபயந்தந்தருளும் என்பதாம். (33)

வந்தே சரணம் புகுமடி யாருக்கு வானுலகந்
தந்தே பரிவொடு தான்போ யிருக்குஞ் சதுர்முகமும்
பைந்தே னலங்கற் பருமணி யாகமும் பாகமும்பொற்
செந்தேன் மலரு மலர்கதிர் ஞாயிறுந் திங்களுமே.

இ-ள். பரிவொடு சரணம்புகும் அடியாருக்கு வந்து — திருக்கடவூரில் வீற்றிருந்தருளும் அபிராமிதேவி தம்மிடத்துப் பேரன்போடு அடைக்கலம்புகும் மெய்யடியாருக்கு முன் எழுந்தருளிவந்து, வான் உலகம் தந்து — அவர் விரும்பிய மேலுலகங்களைக் கொடுத்துவிட்டு, சதுர்முகமும் — (பிரமாவினுடைய) நான்கு நாக்குக்களினும், பைந்தேன் அலங்கல் பருமணி ஆகமும் — (விட்டுணுவினுடைய) பசுமையாகிய தேன் பொருந்திய துழாய் மாலை புரளும் பெரிய கௌத்துவ மணியணிந்த திருமார்பினும், பாகமும் — (சிவபெருமானுடைய) வாமபாகத்தினும், செந்தேன் பொன்மலரும் — (இந்திரலோகத்துள்ள செம்மையாகிய தேன்பொருந்திய பொற்றாமரைமலரினும், அலர் கதிர் ஞாயிறும் — விரிகின்ற ஆயிரங் கிரண சமூகங்களையுடைய சூரியமண்டலத்தினும், திங்களும் — சந்திரமண்டலத்தினும், தான் போய் இருக்கும் — தாஞ் சென்று வீற்றிருந்தருளுவர். எ-று.

முகம் — ஆகுபெயர். தேவி இவ்விடங்களின் வீற்றிருந்தருளுவர் என்பதை,

"வேதியர்க ளயனாவில் விஞ்சைமக ளென்றும்
சீதரன்றன் மணமார்பிற் செழுங்கமலை யென்றும்
நாதரிடத் தசிவையென்று நாட்டுவரெண் ணடங்கா
வாதிபரன் மூலபரை யசமனையுன் மயக்கால்."

— சௌந்தரியலகரி

என்னும் செய்யுளானும், அச்செய்யுளில் எண்ணிக் கணின்ற எச்சவும்மையானு மறிக.

தான் என்றது அபிராமிதேவியை. தேவிக்குச் சதுர்முகம் முதலியவற்றினும் திருக்கடவூரே விசேஷமூலஸ்தானம் என்பதாம். அது. வந்து, போய் என்னும் வினையெச்சங்களானும், அதிகாரத்தானும் பெற்றாம். (34)

**இங்கட் பகவின் மணநாறுஞ் சீறடி சென்னிவைக்க**
**எங்கட் கொருதவ மெய்திய வாவெண் ணிறந்தவிண்ணோர்**
**தங்கட்கு மிந்தத் தவமெய்து மோதரங் கக்கடலுள்**
**வெங்கட் பணியணை மேற்றுயில் கூரும் விழுப்பொருளே.**

இ — ள். தரங்கக் கடலுள் வெங்கண் பணி அணைமேல் துயில் கூரும் விழுப்பொருளே — திரைமறிகின்ற திருப்பாற்கடலின் கண்ணே தறுகண்மையினையுடைய சர்ப்பசயனத்தின்மீது விட்டுணுவை அதிட்டித்து நின்று யோகநித்திரை செய்யும் விழுமிய செம்பொருளாகிய வைஷ்ணவியென்னும் அபிராமிதேவியே! பகவுத் திங்களின் மணம் நாறும் சீறடி சென்னி வைக்க — சோடச கலைகளுள் ஒருகலையாகிய சந்திரவதுமணங்கமழும் தேவரீருடைய சிறிய திருவடிகளைச் சிரசிலே சூட்டி வணங்குதற்கு, எங்கட்கு ஒருதவம் எய்தியவா — மானுடகதியிற் சகலவர்க்கத்துட்பட்ட தமியேங்கட்கும் ஓர் தவம் இருந்த பிரகாரம் மிகவும் நன்று! நன்று!! எண் இறந்த விண்ணோர் தங்கட்கும் இந்தத்தவம் எய்துமோ — நன்கு மதிப்புமிக்க தேவர்கள் தமக்காயினும் இவ்வருந்தவப்பயன் கிடைக்குமோ? எ-று.

ஓகாரம் எதிர்மறையாகலிற் கிடைக்குமாறரி தென்பதாம். பகவு — பிரிவு. ஊடறீர்க்கும் பொருட்டுச் சிவபெருமான் வணங்கும்போது அவரது திருமுடியின்கணுள்ள பாலசந்திரன் தோயப் பெற்று, அதன் மணங்கமழும் சீறடியென்பார் திங்கட் பகவின் மணநாறுஞ் சீறடியென்றார். இது பொருணயம் பாதுகாத்துக் கூறியவாறு. எங்கட்குமென்னும் இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது.

*

பிரமாவை அதிட்டித்து நின்று சிருட்டித்தொழில் செய்யும் சிவசத்தி பிராமி எனப் பெயர்பெறுமாறுபோல வும், உருத்திரரை அதிட்டித்து நின்று சங்கரித்தற் றொழில்செய்யும் சிவசத்தி ரௌத்திரி எனப் பெயர்பெறு மாறு போலவும், விட்டுணுவை அதிட்டித்து நின்று திதித்தற் றொழில்செய்யும் சிவசத்தி வைஷ்ணவியெனப் பெயர்பெறு தலின், அவ்வதிட்டான வொற்றுமை நயம்பற்றி அபிராமி தேவியைத் தரங்கக்கடலுள் வெங்கட் பணியணைமேற் றுயில்கூரும் விழுப்பொருளென்றார். அதிட்டித்தல் – நிலைக் களமாகக் கொண்டு செலுத்துதல். விட்டுணுவின் யோக நித்திரை, அவரை அதிட்டிக்கும் சிவசத்தியின் யோக நித்திரையேயல்லது பிறிதில்லை என்பதும் ஈண்டுக் கூறிய வாற்றானினிது விளங்கும். இவ்வாறு முன்வந்தனவற்றிற்கும் பின்வருவனவற்றிற்கும் ஈதொக்கும். செம் பொருளாவது – நித்தமாயும் தூயதாயும் விகாரமின்றித் தான் என்ஞ் ஞான்றும் ஒரு பெற்றித்தாய் நிற்கும் முதற்பொருள்.

சிவபெருமான் தந்திருமுடிமீது வைத்து வணங்கிய தேவரீரது அருமைச் சீறடிகளை யாமுஞ் சிரசின்மீது வைத்து வணங்கப் பெறுதற்குப் பூர்வசன்மங்களிலே செய்து கொண்ட தவப்பயன் இருந்தபடிஎன்னே!! என்பதாம். (3)

பொருளே பொருண்முடிக் கும்போக மேயரும்போகஞ் செய்யு
மருளே மருளில் வருந்தெரு ளேயென் மனத்து வஞ்சத்(து)
இருளேது மின்றி யொளிவெளி யாகி யிருக்கு முன்றன்
அருளே தறிகின்றி லேனம்பு யாதனத் தம்பிகையே.

இ - ள். பொருளே — இரத்தினம் பொன் வெள்ளி நென் முதலாகிய ஐசுவரியப் பொருளாயுள்ளவரே! பொருள் முடிக்கும் போகமே — அப்பொருள்களான அநு பவித்து முடிக்கும் இன்பதுன்பப் போகமாயுள்ளவரே! அரும்போகம் செய்யும் மருளே - அருமையாகிய அப்போ கந்தரும் மயக்கமாயுள்ளவரே! மருளில் வரும் தெருளே —

அம்மயக்கத்தில் (வெறுப்பறுதலான்) வரும் ஞானமாயுள்ள வரே! அம்புய ஆதனத்து அம்பிகையே — வெண்டாமரை செந்தாமரை மலர்களை ஆசனமாகவுடைய உலகமாதா வாகிய அபிராமிதேவியே! என் மனத்து வஞ்சித்து இருள் ஏதும் இன்றி — தமியேனது மனத்தின்கணுள்ள மாயாந்த காரம் ஒரு சிறிதும் இல்லையாக, ஒளி வெளி ஆகி இருக்கும் உன் அருள் ஏது — அறிவுருவாகிய பரவெளியாயிருக்கும் தேவரீருடைய திருவருள் எவ்வியல்பினது. அறிகின் றிலேன் — அதனைத் தமியேன் அறிகின்றிலேன். எ — று.

பூதாகாசம்போற் சடமன்மையின், சிதாகாசத்தை ஒளிவெளி என்றார்.

அபிராமிதேவியே! ஒன்றற்கொன்று தம்முண் மாறு பட்ட பலகுணந்தழுவிய தேவரீரது திருவருளின் உண் மைத் தன்மையைத் தமியேனுக்கு அறிவித்தருளல் வேண் டும் என்பதாம். (36)

கைக்கே யணிவது கன்னலும் பூவுங் கமலமன்ன
மெய்க்கே யணிவது வெண்முத்து மாலை விடவரவின்
பைக்கே யணிவது பன்மணிக் கோவையும் பட்டுமெட்டுத்
திக்கே யணியுந் திருவுடை யானிடஞ் சேர்பவளே.

இ - ள். எட்டுத் திக்கே அணியும் திரு உடையான் இடம் சேர்பவளே — அட்டதிக்குக்களையே தரிக்கும் திருவுடையாகக் கொண்டருளிய சிவபொருமானது வாம பாகத்திற் பொருந்தும் அபிராமிதேவியே! கைக்கே அணிவது கன்னலும் பூவும் — தேவரீர் திருக்கரங்களின் கண்ணே தரிப்பது மயக்கஞ்செய்யும் கருப்புவில்லும் புட்ப பாணங்களுமேயாம், கமலம் அன்ன மெய்க்கே அணிவது வென் முத்து மாலை — பொற்றாமரையின் பேரரும்புகளை யொத்த திருமுலைகளின்மீது தரிப்பது வெண்மையாகிய

முத்துவடங்களேயாம், விட அரவின் பைக்கே அணிவது பல்மணிக் கோவையும் பட்டும் — விஷத்தையுடைய பாம் பின் படம்போலும் நிதம்பத்தின் மீது தரிப்பது பல இரத்தினங்களிழைத்த மேகலேயும் பட்டுவஸ்திரமுமேயாம். (இஃதென்னே விபரீதம்.) எ-று.

பை - ஆகுபெயர். உடை - வஸ்திரம்.

நாயகனெத்திறம் நாயகியத்திறம் என்னும் உலக மொழிக்கு மாறுகத் திகம்பரராகிய சிவபெருமானது சத்தி யாகிய தேவரீர் கருப்புவில் முதலியவற்றை மேற்கொண் டிருப்பது விபரீதமாமெென நிந்தாஸ்துதி கூறியவாறு. (37)

பவளக் கொடியிற் பழுத்தசெவ் வாயும் பனிமுறுவல்
தவளத் திருநகை யுந்துணை யாவெங்கள் சங்கரனைத்
துவளப் பொருது துடியிடை சாய்க்குந் துணைமுலையாள்
அவளைப் பணிமின்கண் டீரம ராவதி யாளுகைக்கே.

இ - ள். பவளக் கொடியில் பழுத்த செவ்வாயும் — சாதிப்பவளக்கொடிபோல இனிமைகனிந்த சிவந்த திருவா யும், பனி முறுவல் தவளத் திருநகையும் துணையா — குளிர்ச்சி பொருந்திய திருப்புன்முறுவலோடு கூடிய வெள்ளிய தந்தபந்தியுமே போர்த்துணையாக, எங்கள் சங்கரனைத் துவளப் பொருது — நம்முடைய சிவபெருமானை யோகநிலை குலையும்படி போர்செய்து, துடி இடை சாய்க்கும் துணை முலையாள் அவளை — துடிபோலும் இடையைத் துவளச்செய்யும் இரண்டு தனங்களையுடையவ ராகிய அவ்வபிராமிதேவியை, அமராவதி ஆளுகைக்குப் பணிமின் — சுவர்க்கலோக இராஜதானியாகிய அமரா வதியை அரசாளும்பொருட்டு தம்மவர்களே வணங்கக் கடவீர்கள். எ-று.

கண்டீர் என்பது முன்னிலையசை. ஆகவென்பது ஆவெனக் கடைகுறைந்து நின்றது.

நம்மவர்களே! நீவிர் மறுமையில் அமராவதியை இராஜதானியாகக் கொண்டு சுவர்க்கலோக அரசாட்சி செய்யவேண்டுமாயின், அவ்வபிராமிதேவியை இம்மையிலே வணங்கி வழிபடக் கடவீர்கள் என்பதாம். (38)

ஆளுகைக் குன்ற னடித்தா மரைகளுண் டந்தகன்பால்
மீளுகைக் குன்றன் விழியின் கடையுண்டு மேலிவற்றின்
மூளுகைக் கென்குறை நின்குறை யேயன்று முப்புரங்கள்
மாளுகைக் கம்பு தொடுத்தவில் லான்பங்கில் வாணுதலே.

இ — ள். முப்புரங்கள் மாளுகைக்கு அம்பு தொடுத்த வில்லான் பங்கில் வாள் நுதலே — திரிபுரங்களுமழியும் பொருட்டு நாராயணாஸ்திரத்தை அநுசந்தித்த மேருகிரியாகிய வில்லையுடைய சிவபெருமானது வாமபாகத்தில் எழுந்தருளியிருக்கும் ஒளிபொருந்திய நெற்றியையுடைய அபிராமிதேவியே! ஆளுகைக்கு உன்றன் அடித்தாமரைகள் உண்டு — தமியேனை அடிமைகொள்ளுதற்குத் தேவரீருடைய திருவடிப் பொற்கமலங்களுள்ளன, அந்தகன்பால் மீளுகைக்கு உன்றன் விழியின் கடை உண்டு — மரணகாலத்திலே யமனிடத்தினின்றும் திரும்புதற்குத் தேவரீருடைய திருக்கடைக் கண்களுள்ளன, மேல் இவற்றின் மூளுகைக்கு என் குறை நின்குறையே அன்று — மேலே கூறிய இவ்விரண்டினும் தேவரீர் முயலுதற்கு உளதாகிய குறை தமியேனது குறையேயல்லாது தேவரீரது குறை ஒன்று மின்று. எ - று.

குறை — இன்றியமையாதது.

அபிராமிதேவியே! தமியேன் மோக்ஷத்தை அடைதற்குளதாகிய குறை என் சிவபுண்ணியஞ் செய்யாமைக் குறையேயல்லது தேவரீரது அநுக்கிரகக்குறையன்று என்பதாம். (39)

வாணுதற் கண்ணியை விண்ணவர் யாவரும் வந்திறைஞ்சிப்
பேணுதற் கெண்ணிய வெம்பெரு மாட்டியைப் பேதைநெஞ்சிற்
காணுதற் கண்ணிய ளல்லாத கன்னியைக் காணுமன்பு
பூணுதற் கெண்ணிய வெண்ணமன் றோமுன்செய் புண்ணியமே.

இ — ள். வாள் நுதல் கண்ணியை — ஒளிபொருந்திய நெற்றியிற் கண்ணையுடையவரும், விண்ணவர் யாவரும் வந்து இறைஞ்சிப் பேணுதற்கு எண்ணிய எம்பெருமாட்டியை — தேவர்கள் அனைவரும் (அமுதபானஞ் செய்யும்படி திருக்கடவூரில்) வந்து, அக்காலமுதல் எக்காலத்தும் பூசித்து வணங்கும் பொருட்டுத் தஞ் சபாமத்தியில் நிச்சயஞ்செய்த எம்பெருமாட்டியும், பேதை நெஞ்சில் காணுதற்கு அண்ணியள் அல்லாத கன்னியை - அறியாமை பொருந்திய மனத்தின்கணுள்ள பாசஞான பசுஞானங்களினாலே தரிசித்துக் கோடற்குச் சமீபிப்பவராகாத நித்திய கன்னிகையுமாகிய அபிராமிதேவியை, காணும் அன்பு பூணுதற்கு எண்ணிய எண்ணம் அன்றோ முன்செய் புண்ணியம் - நாடோறுஞ் சந்நிதியிற் சென்று தரிசிக்க வேண்டுமென்று தேவிபத்தியைத் தலைக்கொள்ளும்படி எண்ணிய எண்ணமல்லவா தமியேன் பூர்வசன்மங்களிலே செய்துகொண்ட சிவபுண்ணியமாவது. எ - று.

திருக்கடவூர் என்புழிக் கடம் — அமுதகுடம். அதன் வரலாற்றை அத் தலபுராணத்துட் காண்க; ஈண்டு விரிக்கிற் பெருகும்.

அந்நினைவே சாலச்சிறந்த சாதனம் என்பதாம். (40)

புண்ணியஞ் செய்தன மேமன மேபுதுப் பூங்குவளைக்
கண்ணியுஞ் செய்ய கணவருங் கூடிநங் காரணத்தால்
நண்ணியிங் கேவந்து தம்மடி யார்க ணடுவிருக்கப்
பண்ணிநஞ் சென்னியின் மேற்பத்ம பாதம் பதித்திடவே.

இ — ள். புதுக் குவளைப் பூங் கண்ணியும் — அன்றலர்ந்த புதிய கருங்குவளை மலர்போலுங் கண்களையுடைய அபிராமி தேவியும், செய்ய கணவரும் — செந்நிறம் பொருந்திய திருமேனியையுடைய அவர் நாயகராகிய சிவபெருமா னும், நம் காரணத்தால் நண்ணிக்கூடி — நமதுநிமித்தம்) தம்முளியைந்து கூடி அர்த்தநாரீஸ்வர வடிவமாகி, இங்கே வந்து — இவ்விடத்தில் எழுந்தருளிவந்து, தம் அடியார்கள் நடு இருக்கப் பண்ணி - எம்மைத் தம்மெய்யடியார்கள் மத்தியிலே சுகாசனமாக இருக்கவைத்து, நம் சென்னி யின்மேல் பத்ம பாதம் பதித்திட — நமது புல்லிய சிரசின் மீது தங்கள் அருமைத்திருவடிப் பொற்கமலமலர்களை வைத்துத் தீக்ஷைசெய்தற்கு, மனமே புண்ணியம் செய் தனம் — என் மனமே! நானும் நீயும் அநந்தகோடி பூர்வசன் மங்களிலே விசேஷ சிவபுண்ணியங்கள் செய்து கொண்டோ மன்றோ? எ - று.

சிவபெருமான் அர்த்தநாரீசுவரராகித் தாமே எழுந் தருளி வந்து திருவடிதீக்ஷை செயப்பெறுதற்குக் காரணம் என் மனமே! நாமிருவேமும் அநந்தகோடி பூர்வசன்மங் களிலே செய்துகொண்ட விசேஷ சிவபுண்ணியமேயல்லது பிறிதொன்று மன்றாகலின், இன்னும் அதனையே முயலக் கடவேம் என்பதாம். (41

இடங்கொண்டு விம்மி யிணைகொண் டிறுகி யிளகிமுத்து
வடங்கொண்ட கொங்கை மலைகொண்டிறைவர் வலியநெஞ்சை
நடங்கொண்ட கொள்கை நலங்கொண்ட நாயகி நல்லரவின்
படங்கொண்ட வல்குற் பனிமொழி வேதப் பரிபுரையே.

இ — ள். இடம் கொண்டு விம்மி — விசாலத்தைக் கொண்டு பூரித்து, இணைகொண்டு இறுகி — தம்முள் ஒன்றையொன்றொத்துக் கச்சின்கண் அரிதிலடங்கி, இளகி —

பரிசத்திற் கின்பந்தருமாறு மெல்கி, முத்து வடம் கொண்ட கொங்கை மலை — முத்து வடங்களைத் தம்மீது கொண்ட தனங்களாகிய மலையரணையும், நல் அரவின் படம் கொண்ட அல்குல் கொண்டு — நல்லபாம்பின் படத்தின் தன்மையைக் கொண்ட அல்குற்றேரையும் போர்த் துணையாகக் கொண்டு, இறைவர் வலிய நெஞ்சை — அமுதகடேசுரரது வன்னெஞ்சை வென்று, நடம் கொள்கை நலம் கொண்ட நாயகி — அந்நெஞ்சைத் தமக்கு நடனத் தானமாகத் திறைகொண்ட அவ்வென்றி நலத்தைத் தலைக் கொண்ட (அவர் தம்) திருத்தேவி தாம் யாவரெனின், பனி மொழி வேதப் பரிபுரையே — எவருக்கும் நடுக்கந்தரும் காடின்னிய பதப்பிரயோகத்தை யுடைய வேதங்களாகிய நூபுரங்களைத் தரித்த அபிராமசுந்தரி தேவியேயாம். எ-று.

வென்றென்பது சொல்லெச்சம்; "சொல்லெ னெச்ச முன்னும் பின்னுஞ்—சொல்லள வல்ல தெஞ்சுத லின்றே" என்பதனாற்கொள்க. இனி இடங் கொண்ட வென்பதற்கு மார்பகலம் முழுவதையுந் தனக்கிடமாக அடக்கிக் கொண்டவென்றும், இணை கொண்டிறுகி என்பதற்கு இரண்டின் றன்மையைக் கொண்டு வயிரித்தென்றும், நடங் கொண்ட என்பதற்குக் கூத்தாடுவித்துக் கொண்டவென் றும், பனிமொழி என்பதற்குக் குளிர்ச்சியாகிய அமுத வசனமென்றும் பொருள் கொண்டு, தேவிக்கடையாக்கிக் கூறினும் பொருந்தும். இளகி என்பது இலகி யெனவும் பாடம். ஈண்டுக் காடின்னியம் என்றது சத்தார்த்த கம்பீரங்களை.

திருக்கடவூரில் எழுந்தருளியிருக்கும் அமுதகடேசுரரது திருத்தேவியார் தாம் யாவரெனின், அங்கு எழுந்தருளி யிருக்கும் அபிராமிசுந்தரி அம்மையே. எ-ம் ஆகவே அச் சத்திமானை வழிபடுவோரனைவரும் அச்சத்தியையும் வழி படல்வேண்டும் என்றவாறாயிற்று (42)

பரிபுரச் சீறடிப் பாசாங் குசைபஞ்ச பாணியின்சொல்
திரிபுர சுந்தரி சிந்துர மேனிய டமைநெஞ்சிற்
புரிபுர வஞ்சரை யஞ்சக் குனிபொருப் புச்சிலைக்கை
யெரிபுரை மேனி யிறைவர்செம் பாகத் திருந்தவளே.

இ — ள். பரிபுரச் சீறடி பாச அங்குசை — வேதமாகிய பரிபுரங்களைத் தரித்த சிறிய திருவடிகளையும் பாச அங்குசங்களையும் உடையவரும், பஞ்ச பாணி — பஞ்ச பாணங்களையுடையவருமாகிய, இன் சொல் திரிபுரசுந்தரி - இன் சொற்களை வசனிக்கும் திரிபுர சுந்தரி (யாவரெனின்) சிந்துரமேனியள் — சிவந்த திருமேனியையுடையவரும், தீமை நெஞ்சில் புரி புர வஞ்சரை — உலகத்தையழிக்குந் தீதொழிலைத் தம்மனத்தான் விரும்பிச்செய்த முப்புரக் கபடிகளை, அஞ்சக் குனி பொருப்புச் சிலைக்கை — அவரஞ்சுமாறு வளைத்தழித்த மேருகிரியாகிய விற்பொருந்திய திருக்கரத்தையும், எரி புரை மேனி — (சுவாலிக்கின்ற) அக்கினிபோலுஞ் சிவந்த திருமேனியையுமுடைய, இறைவர் செம்பாகத்து இருந்தவளே — அமுதகடேசுரரது சமபாகத்தில் எழுந்தருளியிருந்தவருமாகிய அபிராமி தேவியேயாம். எ-று.

செம்பாதியாகிய சிவபெருமானுக்குச் செம்பாதியாகிய அபிராமசுந்தரியே தேவியென்று சொல்லச் சிறந்தவர் என்பதாம். (43)

தவளே யிவளெங்கள் சங்கர ஞர்மனை மங்கலமாம்
அவளே யவர்தமக் கன்னையு மாயின ளாகையினல்
இவளே கடவுளர் யாவர்க்கு மேலே யிறைவியுமாந்
துவளே னினியொரு தெய்வமுண்டாகமெய்த் தொண்டுசெய்தே.

இ—ள். இவள் எங்கள் சங்கரனர் மனை மங்கலம் ஆம் தவளே — இவ்வபிராமிதேவி எமது சுகஞ்செய்பவ ராகிய சிவபெருமானது மங்கலகரமாகிய மனையறத்துணைவி யாகும் தவத்தைச் செய்தவராமாயினுமே, அவளே அவர் தமக்கு அன்னையும் ஆயினள் ஆகையினல் — அத்தேவியே அச்சிவபெருமானுக்குச் சிருட்டிக் கிரமமொன்றில் மாதாவு மாயினுராதலினல், இவளே கடவுளர் யாவர்க்கும் மேலே இறைவியும் ஆம் — இத்தேவியே தேவர்களனைவருக்கும் மேலாகிய முதல்வியுமாம், (ஆகலான் இவர்க்கு மெய்த் திருத்தொண்டுகள் செய்து வருந்துவதல்லது) இனி ஒரு தெய்வம் உண்டாக மெய்த்தொண்டு செய்து அவளேன் — இனி இவர்க்கு மேலொரு முதற்றெய்வ முளதாக அதற்கு மெய்த்தொண்டுகள் செய்து வருந்தமாட்டேன்; இதுவே என்றுணிபு. எ—று.

இவளென்னும் அணிமைச் சுட்டினற் கீழுள்ள குணதத் துவ மத்தகத்திலிருக்கும் முதல்வியாகிய உமையெனப தூஉம், அவளே என்னுஞ் சேய்மைச் சுட்டினன் மேலுள்ள சாதாக்கிய தத்துவத்திலிருக்கும் முதல்வியாகிய மனோன் மனி என்பதூஉம் பெற்றும். ஆகலின், முறையே ஸ்ரீகண்ட பரமசிவனுக்கு உமை மனையற முதல்வியாதற்கும், மனோன் மனி அவருக்கு அன்னையாதற்கும் ஏதுப்போந்தவா றுய்த் துணர்ந்துகொள்க. "சிவஞ் சத்தி நாதம் விந்து சதாசிவன் றிகழுமீச — னுவந்தரு ளுருத்தி ரன்முன் மாலய னென்றி னென்றுய் — பவந்தரும்," என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தாற் சிவமூர்த்தி முறைமைத் தோற்றஞ் சொல்லவே, சத்தி முறைமைத் தோற்றமும் பெறப்படுதலி னெண்க.

உமை தாந்தவஞ்செய்தமையின், அவ்வுமையைக் குறித்து நாந்தவஞ்செய்ய வேண்டுவது எற்றுக்கென்னும் வாதிகள் வினவுக்கு விடைகூறிய வாறுயிற்று. (44)

தொண்டுசெய் யாதுநின் பாதந் தொழாது துணிந்திச்சையே
பண்டுசெய் தாருள ரோவில ரோவப் பரிசடியேன்
கண்டுசெய் தாலது கைதவ மோவன்றிச் செய்தவமோ
மிண்டுசெய் தாலும் பொறுக்கைநன் றேபின்வெறுக்கையன்றே.

இ - ள். தொண்டு செய்யாது — அபிராமிதேவியே! தேவரீருக்குத் திருத்தொண்டு செய்யாமலும், நின்பாதம் தொழாது — தேவரீருடைய திருவடிகளை வணங்காமலும், துணிந்து — துணிவு கூர்ந்து, இச்சையே பண்டு செய்தார் உளரோ இலரோ — தம் மனம்போன போக்கின் வண்ணமே தாம் விரும்பிய தொழில்களைப் பூர்வ காலத்திலே செய்த ஞானிகளும் சிலர் உண்டோ இல்லையோ? (உண்டெனின்), அடியேன் கண்டு — அடியேன் அவ்வொழுக்கத்தையே முன் மாதிரியாகக் கண்டுகொண்டு, அப்பரிசுசெய்தால் — அந்தப் பிரகாரம் விதியோடு சிலவிலக்குக்களும் விரவச்செய் தால், அது கைதவமோ — அது தேவரீரால் வெறுக்கப் படுந் தவமாகுமோ, அன்றிச் செய்தவமோ அல்லது விரும்பப்படும் செய்தவமாகுமோ, (தேவரீருடைய திருவுள்ளக் கருத்தைத் தமியேன் அறியேன்), மிண்டு செய் தாலும் — விதிக்கு விரோதமான செயல்களைத் தமியேன் (அறியாமையினாலே) செய்தாலும், பொறுக்கை நன்றே- அவைகளை அந்தஞானிகள் செயல் போலத் தேவரீர் பொறுத்துக் கொள்ளுதலே நீதியாகும், பின் வெறுக்கை அன்று — பின் வெறுத்தல் நீதியன்று. எ-று.

அபிராமிதேவியே! ஞானிகளுட் சிலரது சிலசெயலை மேற்கோளாக் கொண்டு அஞ்ஞானியாகிய தமியேனும் செயினும், அச்செயலுட்சில மறமாயவழியும், அவர்செயலுட் சில மறச்செயல்களை நும்செயலாகக் கொண்டு ஏற்றுக் கொண்டமைபோல, இவற்றையும், அறியாமை

பற்றிச் செய்தமையான், அறச் செயலாகவே கொண்டு ஏற்றுக்கோடலே தேவரீருக்கு நீதி என்பதாம்.

இச்செய்யுட் கருத்தைப் "பாதகத்துக்குப் பரிசுவைத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே" என்னுந் திருவாக்கானு மறிக. (45)

வெறுக்குந் தகைமைகள் செய்யினுந் தம்மடி யாரைமிக்கோர்
பொறுக்குந் தகைமை புதியதன் றேபுது நஞ்சையுண்டு
கறுக்குந் திருமிடற் றானிடப் பாகங் கலந்தபொன்னே
மறுக்குந் தகைமைகள் செய்யினும் யானுன்னை வாழ்த்துவனே.

இ — ள். வெறுக்கும் தகைமைகள் செய்யினும்—மேலே கூறிய பிரகாரம் தேவரீர் வெறுக்குஞ் செயல்களைத் தமியேன் அறிந்து செய்யினும், தம்மடியாரை மிக்கோர் பொறுக்கும் தகைமை புதியது அன்றே — தம்மந்தரங்க மெய்யடியார்களது இச்செயல்களைப் பெரியோர்கள் பொறுத்தருளும் பெருந் தகைமையும் நூதனமல்லவே (பூர்வீக வழக்கமேயாம்). புது நஞ்சை உண்டு கறுக்கும் திருமிடற்றான் இடப்பாகம் கலந்த பொன்னே - பாற் கடலிற் புதிதாகத் தோன்றிய ஆலகால விஷத்தையுண்டு கருநிறம் பொருந்திய திருக்கண்டத்தையுடைய ஸ்ரீகண்ட பரமசிவனது வாமபாகத்தைத் தழுவிய பொன்போலும் அபிராமிதேவியே! மறுக்கும் தகைமைகள் செய்யினும் — தேவரீர் தமியேனை ஏற்றுக்கொள்ளாது எதிர்மறுக்கும் செயல்களைச் செய்யினும், யான் உன்னையே வாழ்த்துவன் — யான் தேவரீரையே என்றுந் தோத்திரஞ் செய்து திரிவேன். எ-று.

பிரித்துக்கூட்டப்பட்ட உன்னையே என்னுமேகாரம் பிரிநிலை. இக்கருத்துக்களை, "சார்ந்தாரைக் காத்த றலைவர்கடன்" என்னுஞ் சிவஞானபோத வெண்பாவானும், "துடைக்கினும் போகேன்" என்னும் தேவாரச் சுருதியானு முய்த்துணர்க.

தமியேன தேவரீரையே குலதெய்வமாகக் கொண்ட வழியடியேனாகலின், அறிந்து செய்த குற்றங்களையும் தேவரீர் பொறுத்தருளல் வேண்டும். பண்டைக்கால வழக்கமுமிதுவேயாம்; அல்லவென்று எதிர்மறுக்கினும், தமியேன் தேவரீரை விட்டு நீங்காமையும் ஒருதலை என்பதாம். (46)

வாழும் படியொன்று கண்டுகொண் டேன்மனத் தேயொருவர்
வீழும் படியன்று விள்ளும் படியன்று வேலைநிலம்
ஏழும் பருவரை யெட்டுமெட் டாம லிரவுபகல்
சூழுஞ் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே.

இ-ள். வாழும்படி ஒன்று கண்டு கொண்டேன் — தமியேன் நிரதிசய விண்பத்தில் வாழுமாறு நித்த முத்த சுத்த சித்தாகிய ஒரு வஸ்துவைச் (சுத்தசைதன்னியக் கண்ணைற்) கண்டு கொள்ளப்பெற்றேன், ஒருவர்மனத்தே வீழும்படி அன்று — அது ஒருவர் தம்மனத்தினாலே விரும்பும் முறைமை யுடைத்தன்று, விள்ளும் படி அன்று — வாயினாலே சொல்லும் முறைமை உடைத்தன்று. வேலை நிலம் ஏழும் பரு எட்டு வரையும் எட்டாமல் — கடல்சூழ்ந்த நிலவுலக முதலிய ஏழுலகங்கட்கும் பெரிய அட்டகுலாசலங்கட்கும் சமீபியாமலே, பகல் இரவு சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே — பகலுமிரவும் மேருகிரியை வலம்வரும் சூரிய சந்திரர்களாகிய இரு சுடர்களுக்கும் மத்தியிலே கிடந்து பிரகாசிக்கின்றது. (அதனை நம்மவர்களே விரைந்து காண்மின்கள்.) எ-று.

வீழுதல் – விரும்புதல்; என்றது தியானத்தை. ஈண்டு ஒன்று என்றது யாவையுமா மேகமாகிய பராசத்தியாயுள்ள அபிராமிதேவியை.

நம்மவர்களே, மனம் வாக்குக் காயங்கட்கு அதீதையாய்ச் சூரிய சந்திரமண்டல மத்தியிலே விளங்குகின்ற சுயஞ்சோதியாகிய அபிராமிதேவியை நான்றிருவருள்

வாயிலாக ஞானக் கண்ணுற் றரிசித்துக் கொள்ளப் பெற்றேன்; நீவிரும் அத்தேவியை அங்ஙனம் விரைந்து தரிசித்துக் கொள்ளப்பெறுமின் என்பதாம். (47)

சுடரும் கலைமதி துன்றுஞ் சடைமுடிக் குன்றிலொன்றிப்
படரும் பரிமளப் பச்சைக் கொடியைப் பதித்து நெஞ்சில்
இடருந் தவிர்த்திமைப் போதிருப் பார்பின்னு மெய்துவரோ
குடரும் கொழுவுங் குருதியுந் தோயுங் குரம்பையிலே.

இ—ள். சுடரும் கலைமதி துன்றும் சடைமுடிக் குன்றில் ஒன்றிப் படரும் — பிரகாசிக்கும் ஒரு கலையாகிய பிறைமதி தவழுஞ் சடாமுடியாகிய சிகரத்தைக் கொண்ட சிவபெருமானாகிய செம்பவளக் குன்றிற் பொருந்திப் படரா நிற்கும், பரிமளப பச்சைக் கொடியை நெஞ்சில் பதித்து — இயற்கை வாசனை கமழும் அபிராமிதேவியாகிய பசுங் கொடியை மனமாகிய பாத்தியுட்பதித்து (அன்புநீர்பாய்ச்சி வளர்த்து), இடரும் தவிர்த்து இமைப்போத இருப்பார் — (அதனற் சிவானந்தானுபவ விளைவைப் பெற்றுத் திரிகரண இயக்கத்தினுலாகும்) துன்பத்தையுமொழித்து ஒருமாத்திரைப் பொழுதேனும் சிவயோகத்திலிருப்பவர், குடரும் கொழுவும் குருதியும் தோயும் குரம்பையில் பின்னும் எய்துவரோ குடலும் நிணமும் இரத்தமும் பொருந்துஞ் சமுதாயமாகிய சரீரத்தை எடுத்துப் பின்னும்பிறப்பார்களோ? எ–று

ஓகாரம் எதிர்மறை யாகலிற் பிறவார் என்பதாம். இடரும் என்னும் உம்மை எச்சவும்மை.

அபிராமிதேவியை மனத்தில் உறைப்பைத் தியானித்து ஒரு கணமேனுஞ் சிவயோகத்திலிருப்பவர் பின் பிறவார் என்பதாம். (48)

குரம்பை யடுத்துக் குடிபுக்க வாவிவெங் கூற்றுக்கிட்ட
வரம்பை யடுத்து மறுகுமப் போது வளைக்கையமைத்
தரம்பை யடுத்த வரிவையர் சூழவந் தஞ்சலென்பாய்
நரம்பை யடுத்த விசைவடி வாய்நின்ற நாயகியே.

இ-ள். நரம்பை அடுத்த இசை வடிவாய் நின்ற நாயகியே—யாழின நரம்பைப் பொருந்திய சங்கீத நாதரூபமாய் உலகெங்கும் வியாபித்து நிற்கின்ற தலைவியாகிய அபிராமிதேவியே! குரம்பை அடுத்துக் குடிபுக்க ஆவி—சரீரமாகிய குடிசையை யடைந்து அதன்கண் ஒதுக்குக் குடிபுகுந்த என்னுயிர், வெம் கூற்றுக்கு இட்டவரம்பை அடுத்து மறுகும் அப்போது — கொடிய யமனுற் கவர்ந்து கொள்ளப்படும் பொருட்டுப் பிரமாவிதித்த ஆயுளினெல்லையைப் பொருந்தி மனங்கலங்கும் அம்மரண தருணத்தில், அரம்பை அடுத்த அரிவையர் சூழவந்து—அரம்பைமுதலிய தெய்வச் சேடியர்கள் சூழ்ந்து சேவிக்க எழுந்தருளிவந்த, வளைக்கை அமைத்து அஞ்சல் என்பாய்—வளையல்களைத் தரித்த அகங்கையினுல் அபயந்தந்து அன்பனே அஞ்சற்க என்று திருவாய்மலர்ந்தருளித் தமியேனைப் பாதுகாத்தருளும். எ—று.

அபிராமிதேவியே! யமனுல் என்னுயிர் கவரப்படும் மரண தருணத்திற் றப்பாதெழுந்தருளிவந்து அபயந்தந்து தமியேனைப் பாதுகாத்தருளும் என்பதாம். (49)

நாயகி நான்முகி நாரா யணிகை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதிநச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கியென்
ருயகி யாதி யுடையாள் சரண மரணமக்கே.

இ—ள். நாயகி — சர்வலோகைகநாயகியும், நான்முகி — நான்கு முகங்களையுடைய பிரமாவின் சத்தியும், நாராயணி—நாராயணனுடைய சத்தியும், கை நளின பஞ்ச சாயகி—கையிலே தாமரை மலர் முதலிய பஞ்ச பாணங்களையுடையவரும், சாம்பவி — சம்புவின் சத்தியும், சங்கரி — சங்கரனது சத்தியும், சாமளை — சாமளா தேவியும், நச்சு வாய்ச் சாதி அகிமாலினி — நஞ்சுபொருந்திய வாயையுடைய நல்லசர்ப்பமாலிகாபரணத்தையுடையவரும், வாராகி — வராகத்தின் சத்தியும், சூலினி — சூலத்தையுடையவரும், மாதங்கி என்று ஆய கியாதி உடையாள் சரணமே — மதங்கமுனிவரது புத்திரியெனப் பொருள்படும் மாதங்கியுமென்றிங்ஙனமாகிய கீர்த்தியை யுடைய அபிராமிதேவியினது திருவடிகளே, நமக்கு அரண் — நமக்குப் புகலிடம். எ—று.

கைந்நளினம் என்பதனைப் பண்புத் தொகையாகக் கோடலுமொன்று. பிரிநிலையேகாரம் பிரித்துக் கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. சாமளம்—பச்சை. சாதி — உயர்ச்சி. கியாதி—கீர்த்தி. நாயகி—பராசத்தி. நான்முகி—சரசுவதி. நாராயணி—இலக்குமி. கைநளின பஞ்சசாயகி—உமை. சாம்பவி—நின்மலசிவசத்தி. சங்கரி — மனோன்மனி. ஏனைப்பரிவாரசத்திகளை அபிராமிதேவி என்றது உபசாரம் பற்றியென உய்த்துணர்ந்துகொள்க. வராக சம்பந்த முடைய சத்தி பூமிதேவியாகலின், நாராயணி என்பதனோடிதனிடை வேற்றுமையுண்மை தெளிந்துகொள்க. நாராயணி நாராயணனுடைய தங்கையுமாம். இச்சத்தி பேதத் தோற்றங்களெல்லாம் அநுக்கிரகத்தின் பொருட்டேயாமாகலின், ஆயகியாதியுடையாள் எனக் கூறினர்.

''எத்திற நின்றா னீச னத்திற மவளு நிற்பள்'' என்னும் அபிராமிதேவியின் திருவடிகளே எமக்குப் புகலிடம் என்பதாம். (50)

அரணம் பொருளென் றருளொன் றிலாத வசுரர்தங்கண்
முரணன் றழிய முனிந்தபெம் மானு முகுந்தனுமே
சரணஞ் சரண மெனநின்ற நாயகி தன்னடியார்
மரணம் பிறவி யிரண்டுமெய் தாரிந்த வையகத்தே.

இ-ள். அரணம் தம் பொருள் என்று அருள் ஒன்று இலாத அசுரர்கள் முரண் அன்று அழிய முனிந்த பெம்மானும் முகுந்தனுமே—பொன் வெள்ளி இரும்புகளினாலாகி, மும்மதில்களுமே தமக்குறுதிப் பொருளென்றுட்கொண்டுய அதனாற் சீவகாருண்ணியம் சிறிதுமற்ற தாரகாக்கன் கமலாக்கன் வித்தியுன்மாலி என்னும் அசுரர்கள் மூவரது வலிமையும் அக்காலத்தொருங்கழிய வெகுண்ட சிவபெருமானும் விட்டுணுவுமே, சரணம் சரணம் என நின்ற நாயகிஅடியார்—நமஸ்காரம் நமஸ்காரமென்று விண்ணப்பஞ் செய்ய, நின்றருளுகின்ற தலைவியாகிய அபிராமிதேவியினுடைய மெய்யடியார்கள், இந்த வையகத்தே பிறவி மரணம் இரண்டும் எய்தார்—இப்பூமியின் கண்ணே சனன மரணங்களாகிய இரண்டையும் அடையமாட்டார்கள். எ—று.

இறப்பவும் பெருந்தகைமையினையுடைய அபிராமிதேவியினது மெய்யடியார்கள் இவ்வொருபிறப்பிலே இனிப் பூமியிற் பிறந்திறவா நிரதிசயவின்பத்தை அடைதல் ஒருதலை என்பதாம்.

வையந் துரக மதகரி மாமகு டஞ்சிவிகை
பெய்யுங் கனகம் பெருவிலை யாரம் பிறைமுடித்த
வையன் றிருமனை யாளடித் தாமரைக் கன்புமுன்பு
செய்யுந் தவமுடை யார்க்குள வாகிய சின்னங்களே.

இ-ள். பிறை முடித்த ஐயன் திருமனையாள் அடித் தாமரைக்கு—பிறைமதியைச் சடாமுடியிற்றரித்த சிவ

பெருமானுடைய திருத்தேவியாராகிய அபிராமியம்மையி னது திருவடித் தாமரை மலர்களுக்கு, முன்பு அன்பு செய்யும் தவம் உடையார்க்கு உள ஆகிய சின்னங்கள் — பூர்வசன்மங்களிலே பேரன்புசெய்த தவத்தையுடைய அடியவர்களுக்கு இம்மைக்கண்ணுள்ளனவாகிய அடையா ளங்கடாம்(யாவையெனின்.), வையம் துரகம் மதகரி மா மகுடம் சிவிகை பெய்யும் கனகம் பெருவிலை ஆரம்—தேரும் குதிரையும் மதயானையும் சீரிய கிரீடமுஞ் சிவிகையும் சேமிக்கப்படும் பொன்னும் பெருவிலைபெறும் ஆபரணமும் (இன்னோரன்ன பிறவுமாம் எனவறிக.) எ - று.

நம்மவர்களே! இம்மைக்கணுளவாகிய இவ்வடை யாளங்களால் இவர் கழிபிறப்பில் அபிராமிதேவிக்குப் பேரன்பு செய்தவரென நிச்சயித்தறிந்து, நீவிரும் அப்பே ரன்பையே செய்க என்பதாம். (52)

சின்னஞ் சிறிய மருங்கினிற் சாத்திய செய்யபட்டும்
பென்னம் பெரிய முலையுமுத் தாரமும் பிச்சிமொய்த்த
கன்னங் கரிய குழலுங்கண் மூன்றுங் கருத்தில்வைத்துத்
தன்னந் தனியிருப் பார்க்கிது போலுந் தவமில்லையே.

இ - ள். சின்னஞ் சிறிய மருங்கினில் சாத்திய செய்ய பட்டும்—மிகச்சிறிய திருமருங்கிற் சாத்தியருளிய செப்பட் டுடையும், பென்னம் பெரிய முலையும்—மிகப்பெரிய இரு திருமுலைகளும், முத்து ஆரமும் — அத்திருமுலைகளின்மீ தணிந்த முத்துமாலைகளும், பிச்சிமொய்த்த கன்னங் கரிய குழலும் — (கங்கையோடு கூடவந்த) பிச்சிப்பூமாலையை நெருங்கத் தரித்த மிகக் கரிய திருக்கூந்தலும், கண் மூன்றும் கருத்தில் வைத்துத் தன்னந்தனி இருப்பார்க்கு— திருநேத்திரங்களுமாகிய இவைகளைத் தம்மனத்தில் உறுதி

யாகத் தியானித்துக்கொண்டு ஏகாந்தஸ்தானத்திலிருக்கும் சிவயோகிகளுக்கு, இதுபோலும் தவம் இல்லை—ஞானம் வாயிலாக வீடுபயக்கும் இச்சிவயோகம்போலும் தவம் பிறிதொன்றில்லை. எ - று.

இனி இனி என்னும் அடுக்கு ''இன்னினி'' என நிலைமொழி சிதைந்து வந்தாற்போலச் சிறிய சிறிய என்பன சின்னஞ்சிறிய எனவும், பெரியபெரிய என்பன பென்னம்பெரிய எனவும், கரிய கரிய என்பன கன்னங்கரிய எனவும், தனித் தனி என்பன தன்னந்தனி எனவும் வந்த நிலைமொழிச் சிதைவுகள். பிச்சி கங்கையோடு கூடவந்த சரித்திரத்தைத் திருக்கடவூர்த்தலபுராணத்துக் காண்க.

சரியை கிரியை யோகங்களாகிய முத்தி சாதனங்கள் மூன்றினுள்ளும் இவ்வியோகமே சிறந்ததென்பதாம். (53)

இல்லாமை சொல்லி யொருவர்தம் பாற்சென் றிழிவுபட்டு
நில்லாமை நெஞ்சி னினைகுவி ரேனித்த நீடுதவங்
கல்லாமை கற்ற கயவர்தம் பாலொரு காலத்திலுஞ்
செல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே.

இ - ள். ஒருவர்பால் சென்று இல்லாமை சொல்லி இழிவுபட்டு நில்லாமை நெஞ்சில் நினைகுவிரேல் - நம்மவர்களே! ஒரு செல்வரிடத்துச் சென்று நும் வறுமையைச் சொல்லி அவர்முன் எளிமையுற்று நில்லாதொழிதலை நீவிர் மனத்தின்கட் சிந்திக்குதிராயின், நித்தம் நீடுதவம் கல்லாமை கற்ற கயவர்பால் ஒரு காலத்திலும் செல்லாமை வைத்த — அனவரதமும் உயர்வாகிய தவஞ்செய்து பழகாமையினையே பழகிய உலோபிகண்மாட்டு ஒருகாலத்திலும் தமியேன் செல்லாமலே தடுத்தாட் கொண்டருளிய, திரிபுரை பாதங்கள் சேர்மின்கள்—திரிபுரசுந்தரி

யாகிய அபிராமிதேவியினுடைய திருவடிகளைப் புகலடை மின்கள். எ - று.

அபிராமிதேவியின் திருவடிகளைப் புகலடைந்த அடிய வர்களுக்கு எக்காலத்தினும் வறுமை இல்லையெனத் தம்மநுபவங் காட்டி வற்புறுத்தியவாறாயிற்று. (54)

மின்னா யிரமொரு மெய்வடி வாகி விளங்குகின்ற
தன்னா ளகமகி ழாநந்த வல்லி யருமறைக்கு
முன்னாய் நடுவெங்கு மாய்முடி வாய முதல்விதன்னை
யுன்னா தொழியினு முன்னினும் வேண்டுவ தொன்றில்லையே.

இ - ள். ஆயிரம் மின் ஒரு மெய்வடிவு ஆகி விளங்கு கின்றது அன்னாள் —ஆயிரம் மின்னல்கள் ஒருங்குதிரண்டு பெண்ணியல்புபொருந்திய கரசரணாதி அவயவங்களோடு கூடி ஒருதிருமேனி வடிவாகிப் பிரகாசிக்கின்றது போன்ற வரும், அகம் மகிழ் ஆநந்த வல்லி—தம்பிராணநாயகரும் தம்மடியார்களும் திருவுளமகிழுதற்கேதுவாகிய பேரா நந்தப் பெருவல்லியும், அருமறைக்கு முன்னாய் நடு எங்குமாய் முடிவு ஆய முதல்வி — அரிய வேதங்கட்கு முதலாகியும் அதனடுப் பரப்பெங்கு மாகியும் அதன்முடி வாகியு மிருக்கின்ற இறைவியுமாகிய அபிராமிதேவி, தன்னை உன்னாதொழியினும் உன்னினும் வேண்டுவது ஒன்று இல்லை—தம்மை ஆன்மாக்கள் தியானியாது விடினும் அன்றித் தியானிக்கினும் அவர்மாட்டுத் தம்மால் விரும் பப்படுவது ஒருபொருளுமில்லை. எ - று.

ஆயிரம் அநேகமென்னும் பொருட்டு. வேதத்தின் முதலினும் முடிவினும் நடு விரிவுடைத்தாகலின் நடு வெங்குமாயென்றார். இனி முதல்விதன்னை உன்னா தொழி யினும் உன்னினும் வேண்டுவதொன்றில்லை என்பதற்கு,

இறைவியாகிய அபிராமிதேவியைத் தியானியா தொழி யினும், அன்றித் தியானிக்கினும் அத்தேவி மாட்டு மெய் யடியவர்களால் மோட்சமல்லது பிறிதொன்றும் வேண்டப் படுவதில்லையென அடியார்கள் மேலேற்றிப் பொருள் கூறினும் பொருந்தும்.

அபிராமிதேவி பரோபகாரமொன்றையே வேண்டுபவ ரல்லது தம்பொருட்டாக ஒன்றையும் வேண்டுபவரல்லர் என்பதாம்.

ஒன்றா யரும்பிப் பலவாய் விரிந்திவ் வுலகெங்குமாய்
நின்றா ளனைத்தையு நீங்கிநிற் பாளென்ற னெஞ்சினுள்ளே
பொன்றாது நின்று புரிகின்ற வாவிப் பொருளறிவா
ரன்றா லிலையிற் றுயின்றபெம் மானுமென் னையனுமே.

இ - ள். ஒன்றாய் அரும்பி — ஏகமாய்ப் பராசத்தி சமட்டிரூபமாகியும், பலவாய் விரிந்து — அநேகமாய் ஏனைச் சத்தி வியட்டிரூபமாகியும், இவ்வுலகு எங்குமாய் நின்றாள் — வியாபகவகையினாலே இச்சர்வலோகங்களுமாய் நிற்பவரும், அனைத்தையும் நீங்கி நிற்பாள் — அவை யனைத்தையும் வியாப்பியவகையினாலே நீங்கி நிற்பவரு மாகிய அபிராமிதேவி, என்நெஞ்சின் உள்ளே பொன்றாது நின்று புரிகின்றவா — தமியேனது மனத்தினுள்ளே நீங் காது நின்று திருவருள் செய்கின்றவாறு என்னேகொலதி சயம்? இப்பொருள் — அதி சூக்குமமாகிய இச்சைவசித் தாந்தத் துண்மைப் பொருளை, அன்று ஆலிலையில் துயின்ற பெம்மானும் என் ஐயனுமே அறிவார் — சலப்பிரளய காலத்தில் ஆலிலையின் மீதுயோகநித்திரை செய்த பெருமை யையுடைய விட்டுணுவும் என்பரமபிதாவாகிய சிவபெரு மானுமே அறிவார். (வேறியாவர் அறியவல்லுநர்.) எ - று.

எண்ணின்கணின்ற எதிரது தழீஇய உயர்வுசிறப்பும் மையான் அவ்விருவர்போலும் சிவஞானிகளும் இவ்வுண்

மையை அறிவர் என்பதூஉம் பெறும். சமட்டிரூபம் — பொதுவகையானிற்கும் ரூபம். வியட்டி ரூபம் - சிறப்பு வகையானிற்கும் ரூபம். வியாபகம் - எங்கும் நிறைந்து நிற்றல். வியாப்பியம் வியாபிக்கப்படுகின்ற பொருள்.

சமட்டிவியட்டியாயும் வியாபகவியாப்பியமாயும் உலகெங்கும் நிற்கின்ற அபிராமிதேவி என்னெஞ்சினுண் மாத்திரம் நீங்காமலே நின்று அருள்புரியுந்திறம் எவராலும் எளிதின் அறிதற்பாற்றன் றென்பதாம். (56)

ஐய னளந்த படியிரு நாழிகொண் டண்டமெல்லா
முய்ய வறஞ்செயு முன்னையும் போற்றி யொருவர்தம்பாற்
செய்ய பசுந்தமிழ்ப் பாமா லையுங்கொண்டு சென்றுபொய்யு
மெய்யு மியம்பவைத் தாயிது வோவுன்றன் மெய்யருளே

இ-ள். ஐயன் அளந்த படி இரு நாழிகொண்டு — சர்வலோக பூச்சியராகிய ஏகாம்பரநாதசுவாமி அளவை செய்து கொடுத்த படிப்பொருளாகிய இருநாழிநெல்லையுங் கைக்கொண்டு, அண்டம் எல்லாம் உய்ய அறம் செய்யும் உன்னையும் போற்றி — சர்வாண்ட சராசரங்களும் உச்சிவிக்கும்பொருட்டு முப்பத்திருவகைத் தருமங்களையும் பரிபாலனஞ்செய்த காமாக்ஷியாகிய தேவரீரையும் வாழ்த்தி, ஒருவர்பால் செய்ய தமிழ்ப் பசும் பாமாலையும் கொண்டு சென்று — ஒரு செல்வர்மாட்டுச் செந்தமிழ்ப் பசும்பாமாலையையும் அவ்வாக்காற் புனைந்துகொண்டு சென்று, பொய்யும் மெய்யும் இயம்ப வைத்தாய் — அவர் முன்பொய்யும் மெய்யும் விரவப் பேசும்படியுந் தமியேனை நிறுவியருளினீர். இதுவோ உன் மெய் அருள் — அபிராமி தேவியே! இதுதானோ தேவரீர் அடியேன் மேற்கொண்ட உண்மையாகிய திருவருள்? எ - று.

இருநாழி—அடையடுத்தவாகுபெயர். நாழி—அரைப் படி. அது "உண்பதுநாழி யுடுப்பது நான்குமுழம்" என்னும் ஔவை வாக்கானும், "நாழி எட்டுக்கொண்டது குறுணி" என்னும் எண் சுவடியானும் அறிக. குறுணி நான்குபடி. இனி நாழி ஒரு படி யென்பாருமுளர். இது, தேசாந்தர முகத்தலளவைக் கருவிகளின் விகற்பங்களான் நேர்ந்த பிற்காலத்தொருசாரார் வழக்கெனஉய்த் துணர்ந்து கொள்க. படிப்பொருள்—உணவுப்பொருள்.

தருமநாயகியாகிய அபிராமிதேவியே! தேவஸ்துதி செய்த வாக்கிலே வயிறோம்பும்பொருட்டு நரஸ்துதியும் செய்து ஒரு செல்வர் மாட்டுச்சென்று பொய்யும் மெய்யும் கலந்து பேசும் படியும் தமியேனை நிறுவியருளினீர். இஃது, எடுத்த இவ்வுடம்பின்கண் முகந்துகொண்ட வினைக்கு ஏற்கு மாயினும், நும்விசேட திருவருட் பெருக்கத்திற்கு ஏலா தென்பதாம். (57)

அருணம் புயத்துமென் சித்தாம் புயத்து மமர்ந்திருக்குந்
தருணம் புயமுலைத் தையனல் லாடகை சேர்நயனக்
கருணம் புயமும் வதனம் புயமுங் கராம்புயமுஞ்
சரணம் புயமுமல் லாற்கண்டி லேனொரு தஞ்சமுமே.

இ - ள். அருண அம்புயத்தும்—செந்தாமரை மலரினும், என்சித்த அம்புயத்தும்—தமியேனது இருதய கமலத்தினும், அமர்ந்து இருக்கும் தருண அம்புயமுலைத் தையல் நல்லாள்—ஒரு நிகராகவிரும்பி வீற்றிருக்கும் இளமைபொருந்திய செந்தாமரை அரும்புபோலும் தனங்களையுடைய அபிராமி தேவியினது, தகைசேர் கருணை நயன அம்புயமும்—தகுதிபொருந்திய கிருபாநோக்க வனசமும், வதன அம்புயமும்—திருமுகாரவிந்தமும், கர அம்புயமும்—கைக்கமலமும், சரண அம்புயமுமே அல்லால்—திருவடித்தாமரை மலர்களுமே யல்லது, ஒருதஞ்சமும் கண்டிலேன்—மற்றோர் உயிர்த்துணையையும் தமியேன் காணப் பெற்றிலேன். எ - று.

தையனல்லாள்—இருபெயரொட்டுப் பண்புத்தொகை; பெண்களுக்குள் நல்லவளென்றுமாம்.

என்னிருதயகமலத்தைக் கோயில் கொண்டிருக்கும் அபிராமிதேவியினது நயனும்புயமுதலிய சதுராம்புயங் களுமே யல்லது வேறோருயிர்த்துணையையும் தமியேன் உளதாக அறியப்பெற்றிலேன் என்பதாம். (58)

தஞ்சம் பிறிதில்லை யீதல்ல தென்றுன் றவநெறிக்கே
நெஞ்சம் பயில நினைகின்றி லேனொற்றை நீள்சிலையு
மஞ்சம்பு மிக்கல ராகநின் ருயறி யாரெனினும்
பஞ்சஞ்சு மெல்லடி யாரடி யார்பெற்ற பாலரையே.

இ-ள். நீள் ஒற்றைச் சிலையும் அஞ்சு அம்பும் இக்கு அலர் ஆக நின்றாய் — நீண்ட தனிவில்லும் பஞ்சபாணங் களும் முறையே கரும்பும் தாமரை முதலிய ஐந்துபுட்பங் களுமாகக்கொண்டு முத்தொழில்செய்து நிற்கின்ற அபிராமிதேவியே! ஈது அல்லது பிறிது தஞ்சம் இல்லை என்று — இத்தவநெறியொன்றல்லது பிறிதொரு பற்றுக் கோடும் என்னுயிர்க்கின்றென்பதைப் பாவியேனறிந்திருந் தும், உன் தவநெறிக்கே நெஞ்சம் பயில நினைகின்றிலேன்— தேவரீருடைய அத்தவநெறியின்கண்ணே மனத்தைச் செலுத்தி வழிபடத் தமியேன் எண்ணுகின்றிலேன், பஞ்சு அஞ்சு மெல் அடியார் அறியார் எனினும்—சுகிர்ந்த பஞ்சையும் அஞ்சுகின்ற மிருதுவாகிய உள்ளடிகளையுடைய பெண்கள் தாம் பேதைமையை இயற்கையாக வுடையவ ராயினும், பெற்ற பாலரை அடியார் — தாம்பெற்ற புத்திரரை அவர் குற்றஞ்செய்தவழியும் தண்டிக்கமாட் டார் அன்றோ? எ-று.

செய்யுளாகலின் சுட்டுமுன் வந்தது. ஈண்டுத் தவ நெறி என்றது சரியை கிரியா யோகங்களை. பயிற்ற என்

னும் பிறவினை பயில எனத் தன்வினையாய் நின்றது. தன் வினையாகக்கோடல் அத்துணைச் சிறப்பன்றென்க. நிரனிறை. பஞ்சுமென்னும் உம்மை விகாரத்தாற்றொக்கது. பஞ்சை எழுவாயாக வைத்துரைப்பினுமமையும்.

அபிராமிதேவியே! பெற்ற நற்றாயர் தம் புத்திரரைக் குற்றஞ் செய்தவழியும் தண்டியாமைபோலத் தமியேன் அறிந்து செய்த இக்குற்றத்தையும் தேவரீர் பொறுத்தருளித் தமியேனுக்குப் பூரணானுக்கிரகஞ் செய்யவேண்டும் என்பதாம். அறிந்து செய்த குற்றத்தைப் பொறுத்தல் நூற்றுணிபன்றாகலின், ஆசிரியர் உலக வழக்கத்தை எடுத்துக்காட்டி, அதனை அம்மைமேலாரோபித்துக் குறையிரந்தனரென்க. (59)

பாலினுஞ் சொல்லினி யாய்பனி மாமலர்ப் பாதம்வைக்க
மாலினுந் தேவர் வணங்கநின் றோன்கொன்றை வார்சடையின்
மேலினுங் கீழ்நின்று வேதங்கள் பாடுமெய்ப் பீடமொரு
நாலினுஞ் சாலநன் றோவடி யேன்முடை நாய்த்தலையே,

இ - ள். பாலினும் சொல் இனியாய் — நாவிற்கினிய பாலினுஞ் செவிக்கினிய மாதுரியச் சொற்களை வசனிக்கும் அபிராமிதேவியே! மால் இனும் தேவர் வணங்க நின்றோன் கொன்றை வார்சடையின் மேலினும்—விட்டுணுவும் பிரமா முதலிய மற்றைத் தேவர்களும் வணங்கத் தாம் பதிப்பொருளாய் நிற்கின்ற சிவபெருமானது கொன்றை மாலையைத் தரித்த நீண்ட திருச்சடையின் மேலிடத்தினும், கீழ் நின்று பாடும் வேதங்கள் மெய்ப்பீடம் ஒரு நாலினும்—எட்டாமையினாலே அவரது திருவடிக்கீழ்ப் பாதுகையாக இளைத்து நின்று துதிக்கும் வேதங்களிலுள்ள உண்மையாகிய பிரணவபீடங்கள் நான்கினும் பார்க்க, பனி மா மலர்ப் பாதம் வைக்க — குளிர்ச்சி பொருந்திய

விசேஷமாகிய செந்தாமரை மலர்போலும் உம்முடைய திருவடிகளைச் சூட்டித் தீக்ஷைசெய்தற்கு, அடியேன் முடை நாய்த் தலை சால நன்றே—அடியேனது நாற்றம் வீசும் நாய்த்தலைபோலும் புன்றலை மிகவும் நன்மையை உடைத்தாயிற்றோ? எ-று.

இன்னும் என்பது இனுமென விகாரமாயிற்று. நன்று என்பது ஈண்டுப் பரிசுத்தத்தின்மேற்று. மாலினும் தேவர் வணங்க நின்றோன் என்பதற்குச் சொப்பனவத்தையாகிய மயக்க நிலையினும் தேவர்கள் வணங்க நின்றோன் எனவும், பிரம விட்டுணுக்களாகிய தேவர்கள் தம்மகங்கார நிலையினும் வணங்க நின்றோனெனவும், அதிகார முதிர்ச்சியினாலே மயக்கநிலையின் மேம்பட்ட விட்டுணுவினும் பார்க்க ஏனைத் தேவர் வணங்க நின்றோன் எனவும் பொருள் கூறினுமமையும். பாலினும் மேலினும் நாலினும் என்புழி ஐந்தனுருபு உறழ்பொருட்கண் வந்தது. ஊடலுவகையின் பொருட்டுச் சடையின்மேல் வைக்க வேண்டிற்றென்க. பிரணவபீடம் நான்காவன: தூலப்பிரணவ பீடம், சூக்குமப்பிரணவபீடம், காரணப்பிரணவபீடம், மகா காரணப்பிரணவபீடம், என்பன. அது,

> ''தூலப் பிரணவஞ் சொரூபாநந்தப் பேர்
> பாலித்த சூக்கும மேலைச்சொரூபப் பெண்
> ஆலித்த முத்திரை யாங்கதிற் காரண
> மேலைப் பிரணவம் வேதாந்த வீதியே.''
>
> – திருமந்திரம்

என்னும் செய்யுளானு மறிக. பாதம் வைக்க அடியேன் நாய்த்தலை சாலநன்றே என முடிக்க.

அபிராமிதேவியே! வேண்டிச்சூடிய சிவபெருமானது சடையினும் இளைத்துச்சூடிய வேதப்பிரணவபீடங்கள் நான்கினும் பார்க்க வலியவந்து தேவரீர் நுந்திருவடிகளைச் சூட்டுதற்கு நாயேன் புன்றலை விசேஷமாமாறு என்ன புண்ணியஞ் செய்தேனோ என்பதாம். (60)

தாயே யெனையுமிங் கொருபொரு ளாக நயந்துவந்து
நீயே நினைவின்றி யாண்டுகொண் டாய்நின்னை யுள்ளவண்ணம்
பேயே னறியு மறிவுதந் தாயென்ன பேறுபெற்றேன்
தாயே மலைமகளே செங்கண் மாறிருத் தங்கைச்சியே.

இ - ள். தாயே — உலகமாதாவே! மலைமகளே — பருப்பதபுத்திரியே! செங்கண் மால் திருத்தங்கைச்சியே — செந்தாமரைக் கண்ணையுடைய விட்டுணுவின் திருத் தங்கையே! நாயேனையும் ஒரு பொருள்ஆக நயந்துஇங்கு வந்து நீயே நினைவு இன்றி ஆண்டு கொண்டாய்—புழுத்த நாயினுங்கடையேனாகிய தமியேனையும் ஓர்பொருட்படுத்த விரும்பி இங்கே வலியவந்து தேவரீரே என் நினைவின்றியுந் தடுத்தாட்கொண்டருளினீர், நின்னை உள்ளவண்ணம் பேயேன் அறியும் அறிவு தந்தாய் — அதன்மேலு ந் தேவரீரை வேதசிவாகமங்களிலுள்ள பிரகாரம் இறப்பப் பெரும்பேயேனும் அறியத்தகுஞ் சிவஞானத்தையும் தந்தருளினீர், என்னபேறு பெற்றேன் — எத்துணைப் பெரும்பேறுகளைப் பெற்றேன். எ - று.

எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது.

அபிராமிதேவியே! தேவரீர் தமியேனை மார்ச்சார சம்பந்தமாக வலிய ஆட்கொண்டருளியதன்மேலும் சிவஞா னத்தையுந் தந்தருளினீர். இப்பெரும்பேறுகளைத் தேவரீ ரிடத்து என்போல வேறியாவர் பெற்றனர் என்பதாம்.

(61

தங்கச் சிலைகொண்டு தானவர் முப்புரஞ் சாய்த்துமத
வெங்கட் கரியுரி போர்த்தசெஞ் சேவகன் மெய்யடையக்
கொங்கைக் குரும்பைக் குறியிட்ட நாயகி கோகநதச்
செங்கைக் கரும்பு மலருமெப் போதுமென் சிந்தையதே.

இ - ள். தங்கச் சிலைகொண்டு —பொன்மலையாகிய வில்லைக் கைக்கொண்டு, தானவர் முப்புரம் சாய்த்து — அசுரரது முப்புரங்களையும் அழித்து, மதவெங்கண் கரி உரி போர்த்த செஞ் சேவகன் மெய் அடைய—மதத்தையும் தறுகண்மையையும் உடைய யானையைத் தோலுரித்துப்போர்த்த சுத்தவீரராகிய சிவபெருமானுடைய அருமைத் திருமேனியிற்பொருந்த, கொங்கைக் குரும்பைக் குறியிட்ட நாயகி — தனங்களாகிய குரும்பைகளினாலே குறியீடுசெய்தருளிய காமாக்ஷியம்மையாகிய அபிராமிதேவியினது, கோகநதச் செங்கைக் கரும்பும் மலரும் எப்போதும் என் சிந்தையதே—செந்தாமரை மலர் போலுஞ் சிவந்த திருக்கரங்களின்கணுள்ள கருப்புவில்லும் புஷ்பபாணமும் எப்பொழுதும் எனது தியானத்தின் கணுள்ளனவேயாம். எ - று.

சிந்தையவே எனற்பாலது சிந்தையதே எனப் பன்மையொருமை மயக்கமாயிற்று; தனித்தனி முடிக்கினுமமையும்.

கோகநதம் - கோகமென்னும் நதத்தில் முதற்கணுற்பவித்தது. அத்துணைச் சிறந்த சுத்தவீரராகிய சிவபெருமானை அத்துணைச்சிறுமென் கொங்கைக் குரும்பைகளால் எளிதிற் குறியீடு செய்தருளிய சாதுரியராகலின், அவர்மாத்திரமுமேயன்றி அவர் கைக்கருப்புவில்லும் புட்பபாணமும் தமியேனது தியானத்தை விட்டகலாவாயின என்பதாம். நதம் - மேற்கே ஓடிய ஆறு. (62)

தேறும் படிசில வேதுவுங் காட்டிமுன் செல்கதிக்குக்
கூறும் பொருள் குன்றிற் கொட்டுந் தறிகுறிக்குஞ்சமய
மாறுந் தலைவி யிவளா யிருப்ப தறிந்திருந்தும்
வேறுஞ் சமயமுண் டென்று கொண்டாடிய வீணருக்கே.

இ - ள். குறிக்கும் ஆறும் சமயத் தலைவி இவளாய் இருப்பது அறிந்திருந்தும் — நன்கு மதிக்கப்படும் ஆறுட் சமயங்கட்கும் முதற் றெய்வமாகிய பராசத்தியே இவ்வபி ராமிதேவியாதலை (த்தாம் ஒருசிறிது) அறிந்துவைத்தும், வேறும் சமயம் உண்டு என்று கொண்டாடிய வீணருக்கு — வேறும் சில மெய்ச்சமயங்களுளவென்றுவிபரீதக்கிரகணஞ் செய்து அவைகளைப் பாராட்டி அனுட்டிக்கின்ற பயனிலி களுக்கு, தேறும்படி சில ஏதுவும் காட்டி — அவர் தெளிந்து கொள்ளும்படி சில திருட்டாந்தங்களையும் நாமெடுத்துக் காட்டி, முன்செல் கதிக்குக் கூறும் பொருள் — அவர் இனி அடையும் நற்கதியினிமித்தம் நாம் அவர்கட்குப் போதிக் கும் சைவத்துண்மைப் பொருளானது, குன்றில் கொட் டும் தறி — மலையிற் புடைக்கும் குறுந்தடிபோல அவராற் பழிக்கப்படும். எ - று.

ஆறுக்குமென்னும் நான்கனுருபு விகாரத்தாற்றொக் கது. தறிபோற் பழிக்கப்படுவதைத் தறியென்றொழித்தது உபசாரம். ஆறுமென்னும் முற்றும்மையை எச்சவும்மை யாக்கி, அவற்றிற் கதீதமாகிய சைவசித்தாந்தத்திற்கு மெனப் பொருளுரைத்துக்கொள்க; சிவம் நிர்விகாரியா யிருப்பச் சிவசத்தியே எல்லாவற்றையும் நிகழ்த்துமென் பது சைவசித்தாந்த நூற்றுணிபாகலின். ஈண்டு வீண ரென்றது ஏகான்மவாதப் பைசாசுகள் முதலாயினோரை. அவர் சைவத்துண்மைப் பொருளைத் தூலமாகவறிந்து வைத்தும், கன்மவயத்தான் அறியாதார்போன்று, குதர்க் கஞ்செய் தெதிர்ப்பவராகலின், அவர்கட்குப் போதிக்கும் அவ்வுண்மைப் பொருள், ''காணாதாற் காட்டுவான் றான் காணான் காணாதான்— கண்டானுந் தான்கண்டவாறு'' என்புழிப்போலப் பழிக்கப்படும் என்பதாம், எனவே, அப் பாசஞான பசுஞான பைசாசங்கட்குப் போதிக்கற்க என்ப தூஉம் பெற்றாம். ''பேயன்ன புறச்சமயப் பிணக்கு நூல் வழியனைத்தும் பிழையே'' என்றார் பிறருமென்க. (63)

*வீணே பலிகவர் தெய்வங்கள் பாற்சென்று மிக்கவன்பு
பூணே னுனக்கன்பு பூண்டுகொண் டேனின் புகழ்ச்சியன்றிப்
பேணே னொருபொழு துந்திரு மேனிப்ர காசமன்றிக்
காணே னிருநில முந்திசை நான்கு் ககனமுமே.

இ - ள். உனக்கு மிக்க அன்பு பூண்டு கொண்டேன் — அபிராமிதேவியே! தமியேன் தேவரீருக்குப் பேரன்பு பூண்டுகொண்டேனுதலால், வீணே பலிகவர் தெய்வங்கள் பால்சென்று அன்பு பூணேன் — வீணுகவே உயிர்ப்பலிகளைக் கொள்ளையிடுகின்ற தேவதைகள் மாட்டுச்சென்று அவர்கட்கன்பு செய்தலை மேற்கொள்ளேன், நின் புகழ்ச்சி அன்றி ஒருபொழுதும் பேணேன் — அதுவன்றித் தேவரீருடைய கீர்த்தியையல்லது வேறொருவருடைய கீர்த்தியை ஒருபோதும் பொருட்படுத்தேன், இருநிலமும் நான்கு திசையும் திருமேனிப் பிரகாசம் அன்றிக்காணேன் — பெரிய பூமியினும் நான்கு திக்குகளினும் ஆகாயத்தினும் தேவரீருடைய திருமேனிப் பிரகாசத்தைக் காண்கின்றதன்றிப் பிறிதொன்றைக் காண்கின்றிலேன். எ - று,

உனக்கன்பு பூண்டுகொண்டேனுகலிற் காணேனுகிய தமியேனெனக் கூட்டுக.

அபிராமிதேவியே! தமியேன் தேவரீருக்குப் பேரன்பு பூண்டு கொண்டமையால், வேறு தேவதைகளிடத்து அன்பும்; அத்தேவதைகளது புகழ்ச்சியைப் பேணுதலும் அத்தேவதைகளைத் தரிசித்தலுஞ் செய்யேன் என்பதாம். (54)

---

*இச்செய்யுளான் இவ்வாசிரியரை, இவர்காலத்து ஸ்மார்த்த வேதியருட் சிலர் பொறாமை முதலிய ஏதுக்களான், ''இவர் வாமதந்திரானுசாரி'' என்று கூறித் தூற்றிய பழமொழி யதார்த்த மன்றென்று தெள்ளிதிற் புலப்படக்கிடந்தமை தெளிக.

**ககனமும் வானும் புவனமுங் காணவிற் காமனங்கத்**
**தகனமுன் செய்த தவப்பெரு மாற்குத் தடக்கையுஞ்செம்**
**முகனுமுந் நான்கிரு மூன்றெனத் தோன்றிய மூதறிவின்**
**மகனுமுண் டாயதன் றோவல்லி நீசெய்த வல்லபமே.**

**இ-ள்:** வல்லி நீ செய்த வல்லபம் — அபிராமிதேவியா கிய பொற்கொடியே! தேவரீர் செய்த வல்லபத்தினுல், ககனமும் வானும் புவனமும் காண — அண்டங்களிலுள்ள வரும் சுவர்க்கலோகத்துள்ளவரும் பூமியிலுள்ளவரும் பார்க்க, வில் காமன் அங்கம் முன் தகனம் செய்த தவப் பெருமாற்கு — கருப்புவில்லையுடைய மன்மதனது சரீரத்தை முன்னரே தகனஞ்செய்த சிவயோகத்தையுடைய தக்ஷிணு மூர்த்திக்கு, தடக்கையும் செம்முகனும் முந்நான்கு இரு மூன்று எனத் தோன்றிய — நீண்ட திருக்கைகளும் சிவந்த திருமுகங்களும் முறையே பன்னிரண்டும் ஆறுமாக அவ தாரஞ் செய்த, மூதறிவின் மகனும் உண்டாயதன்றோ — பழைய பேரறிவினையுடைய ஒரு குழந்தையும் உற்பத்தி யாயிற்றல்லவா. எ-று.

அபிராமிதேவியே! தேவரீருடைய வல்லமையினுல் ஞானுேபதேசஞ்செய்து கொண்டிருந்த தக்ஷிணுமூர்த்திக்கும் சண்முகக் கடவுளாகிய ஒரு குழந்தை உற்பவிக்குமே யானுல், நும்வல்லமைக்கு முடியாததொன்றுமில்லை என் பதாம்.

**வல்லப மொன்றறி யேன்சிறி யேனின் மலரடிச்செம்**
**பல்லவ மல்லது பற்றென் றிலேன்பசும் பொற்பொருப்பு**
**வில்லவர் தம்முடன் வீற்றிருப் பாய்வினை யேன்றொடுத்த**
**சொல்லவ மாயினு நின்றிரு நாமங்க டோத்திரமே.**

**இ-ள்:** பசும்பொன் பொருப்பு வில்லவர் உடன் வீற்றிருப்பாய் — மாற்றுயர்ந்த பொன்மயமான மேருகிரி

யாகிய வில்லையுடைய சிவபெருமானோடு சமேதராகிய அபிராமிதேவியே! வல்லபம் ஒன்று அறியேன் சிறியேன் — கல்வி கேள்விகளினலாகிய வல்லமை யொன்றையும் சிறிதும் அறிதலிலன் சிறியேன், நின்மலர் அடிச்செம் பல்லவம் அல்லது பற்று ஒன்று இலேன் வினையேன் — தேவரீருடைய உலகெங்கும் வியாபித்த சிவந்த திருவடிப் பொற்றளிர்களை அல்லது பிறிதொரு களைகள் இலன் பாவியேன், தொடுத்தசொல் அவமாயினும் — இவ்விரு திறனும் விரவப்பெற்ற தமியேன் அவ்வடிகளுக்குச் சாத்தும் பொருட்டுப் புனைகின்ற இவ்வந்தாதி ஆகிய பாமாலை சொற்சுவை பொருட்சுவைகள் இன்றி விருதாவாயினும், நின் திருநாமங்கள் தோத்திரமே — இதன்கட் பெய்த உம்முடைய திருநாமங்களாகிய மந்திர மலர்கள் உமக்குத் தோத்திரமேயாம். எ - று. சொல் - ஆகுபெயர்.

அபிராமிதேவியே! இலக்கணகவியும் வரகவியும் ஆகா அறிவிலியேன் புனைந்த இவ் அந்தாதி ஆகிய பாமாலை அவ்விரு விசேஷ திறனும் ஒருங்குடைய அறிஞரான் ஈண்டு நன்கு மதிக்கப்படாது ஒழியினும், இதன்கட்பெய்த நுந்திருநாமங்களாகிய மந்திர மலர்கள் உமக்குத் தோத்திரமாதற்கு இழுக்கில்லை என்பதாம். (66)

**தோத்திரஞ் செய்து தொழுதுமின் போலுநின் றோற்றமொரு**
**மாத்திரைப் போது மனத்தில்வை யாதவர் வண்மைகுலங்**
**கோத்திரங் கல்வி குணங்குன்றி நாளுங் குடில்கடொறும்**
**பாத்திரங் கொண்டு பலிக்குழ லாநிற்பர் பாரெங்குமே.**

இ-ள்: மின் போலும் நின் தோற்றம் — அபிராமி தேவியே! மின்னற் கொடிபோலச் செவ்வொளிகொண்டு ஒல்கிப் பிரகாசிக்கும் தேவரீருடைய திருமேனிப்

பொலிவை, தொழுது தோத்திரம் செய்து ஒரு மாத்திரைப்போதும் மனத்தில் வையாதவர் — வணங்கித்தோத்திரஞ் செய்து ஒரு கணப் பொழுதாயினும் தம் மனத்திலே பதித்துத் தியானியாதவர்கள், வண்மை குலம் கோத்திரம் கல்வி குணம் குன்றி — கொடையும் குடிப் பிறப்பும் கோத்திரமும் கல்வியும் நற்குணமுமாகிய இவைகள் குன்றப்பெற்று, குடில்கள்தொறும் பாத்திரம்கொண்டு பலிக்கு நாளும் பார் எங்கும் உழலா நிற்பர் — குடிசைகடோறும் பாத்திரத்தைக் கைக்கொண்டு பிஷையின் பொருட்டு அனவரதமும் அலைந்து இப்பூமியெங்குஞ் சுழன்று திரியா நிற்பர். எ - று.

கோத்திரம் — சந்ததிமூலம். இச் செய்யுட் கருத்தை,

"ஆற்றோடு தும்பை யணிந்தாடு மம்பல வாணர்தமைப்
போற்ற தவர்க்கடை யாளமுண் டேயிந்தப் பூதலத்திற்
சோற்றுவியற்றுச் சுகமற்றுச் சுற்றத் துணியுமற்று
வேற்றூலும் பிச்சைகிடையாம லேக்கற் றிருப்பார்களே."

— பட்டினத்தடிகள்.

என்னும் திருவாக்கானுமறிக.

அபிராமிதேவியே! தேவரீருடைய திருமேனித் தோற்றத்தினை ஒரு கணமேனும் மனத்திற் பதித்து வைத்துத் தியானித்து வழிபடாதவர்கள் கல்வி கோத்திரம் கொடை முதலியனவற்றை இழந்து, நித்திய தரித்திரராகிப் பிஷையின் பொருட்டுப் பூமியெங்கும் அலைந்து திரிபவர் என்பதாம். (67)

**பாரும் புனலுங் கனலும்வெங் காலும் படர்விசும்பும்**
**ஊரு முருகு சுவையொளி யூறொலி யொன்றுபடச்**
**சேருந் தலைவி சிவகாம சுந்தரி சீறடிக்கே**
**சாருந் தவமுடை யார்படை யாத தனமில்லையே.**

*

இ - ள் : உவரும் முருகு சுவை ஒளி ஊறு ஒலி — கமழும் நாற்றமும் சுவையும் ஒளியும் பரிசமும் சத்தமுமாகிய காரண தன்மாத்திரைகள் ஐந்தினும், பாரும் — பிருதிவியும், புனலும் — அப்புவும், கனலும் — தேயுவும், வெங்காலும் — வேகம் பொருந்திய வாயுவும், படர் விசும்பும் — இவைகளை உள்ளடக்கிப் பரந்த ஆகாயமுமாகிய காரியபூத பௌதிகங்கள் ஐந்தினும், ஒன்றுபடச்சேரும் தலைவி — அவைகள் தம்முளொற்றுமைப்பட இரண்டற வியாபித்து நிற்கும் சர்வலோகைக நாயகியாகிய, சிவகாமசுந்தரி சீறடிக்கே சாரும் தவம் உடையார் — சிதம்பர சிற்சபாநாயகரது தேவியாகிய சிவகாமசுந்தரி அம்மையினுடைய சிறிய அருமைத் திருவடிகளுக்கே அடைக்கலம் புகும் பெருந் தவமுடைய மெய்யடியார்கள், படையாத தனம் இல்லை — எய்தப்பெறுத திரவியம் ஒன்றுமில்லை. எ - று.

மேலைச் செய்யுளில் எதிர் மறைமுகத்தாற் கூறியவை களையே ஈண்டு உடம்பாட்டு முகத்தான் வற்புறுத்திக் கூறியவாறுயிற்று. (68)

**தனந்தருங் கல்வி தருமொரு நாளுந் தளர்வறியா**
**மனந்தருந் தெய்வ வடிவுந் தருநெஞ்சில் வஞ்சமில்லா**
**இனந்தரு நல்லன வெல்லாந் தருமன்ப ரென்பவர்க்கே**
**கனந்தரும் பூங்குழ லாளபி ராமி கடைக்கண்களே.**

இ - ள் : கனம்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக் கண்கள் — முகிலின் கரிய நிறத்தைத் தரும் புஷ்பம் முடித்த கூந்தலையுடைய அபிராமிதேவியினது திருக்கடைக்கண்க ளானவை, அன்பர் என்பவர்க்கே — தம் மெய்யன்பரென்று சிறப்பித்துச் சொல்லப்படும் அடியார்களுக்கே, கல்வி தரும் — வித்தையைக் கொடுக்கும், தனம் தரும் — திரவி யத்தைக் கொடுக்கும், ஒருநாளும் தளர்வு அறியா மனம் தரும் — ஒரு தினமேனும் சோர்வறியாத மனத்தைக்

கொடுக்கும், தெய்வ வடிவும் தரும் — தெய்வத்தன்மை பொருந்திய பேரழகையும் கொடுக்கும், வஞ்சம் நெஞ்சில் இல்லா இனம் தரும் — கபடசித்தமில்லாத மனைவி மக்கண் முதலாகிய சுற்றத்தையும் கொடுக்கும், நல்லன எல்லாம் தரும் — (அடுத்த மேலைச் செய்யுளினும் வையந்துரக மென்னுஞ் செய்யுள் (52) முதலியவற்றினும் கூறியனவும் ஒழிந்தனவுமாகிய நன்மைகளாயின) எல்லாவற்றையும் கொடுக்கும். எ - று.

இனி அன்பர்கள் என்பவர்க்கே கனம் தரும் பூங்குழலாள் என ஆற்றெழுக்காகக் கொண்டு பொருள்கூறி, அவ்வன்பர்க்கு இம்மையில் தனந்தரும் என வருவித்துக் கூட்டி முடித்தலுமொன்று. இப்பொருட்கு, கனம் — நன்மதிப்பு. என்றது, நன்கு மதிக்கப்படும் பொருள்களெல்லாவற்றினும் மிக நன்கு மதிக்கப்படும் பொருளாகிய பரமுத்தியை.

அபிராமி தேவியினது கடாட்ச வீட்சண்ணியங்களே மெய்யன்பர்களுக்கு இம்மை மறுமை இன்பங்களைக் கொடுக்க வல்லன என்பதாம். (69)

**கண்களிக் கும்படி கண்டுகொண் டேன்கடம் பாடவியிற்**
**பண்களிக் குங்குரல் வீணையுங் கையும் பயோதரமு**
**மண்களிக் கும்பச்சை வண்ணமு மாகி மதங்கர்குலப்**
**பெண்களிற் றோன்றிய வெம்பெரு மாட்டிதன் பேரழகே.**

இ - ள் : பண் களிக்கும் குரல் வீணையும் கையும் — சாமவேத கீதகானமுங் களிகூருதற்கு ஏதுவாகிய இன்னிசையையுடைய வீணையும் அதனைத் தாங்கிய திருக்கரமும், பயோதரமும் — திருத்தனங்களும், மண்களிக்கும் பச்சை வண்ணமும் ஆகி — மண்ணுலகத்தவர் தரிசித்து மனங் களிகூருதற்கேதுவாகிய சாமள வர்ணமுமாகி, மதங்கர்குலப்

பெண்களில் தோன்றிய — பாணர் குலப் பெண்கள் போல வெளிவந்தருளிய, எம் பெருமாட்டி பேரழகு — எம் பெருமாட்டியாகிய மீனாக்ஷிதேவியினது பேரழகினை, கடம்ப அடவியில் கண்களிக்கும்படி கண்டுகொண்டேன் — கடம்ப வனமாகிய மதுரையிலே என் கண்கள் களிகூருமாறு தமியேன் தரிசித்துக் கொள்ளப்பெற்றேன். எ - று.

குரல் — நரம்பு எனினும் அமையும். மதங்கர் குலத்திலே தோன்றினமையால் தேவிக்கு மாதங்கி என்னும் திருநாமம் உளதாயிற்று என அறிக. இந் நாமம் பிறிதும் ஒரு காரணத்தால் வரும். அது மேற் காட்டப்பட்டது.

சிதம்பரமும் மதுரையும் விராட் புருடனுக்கு முறையே இருதய ஸ்தானமும் துவாதசாந்த ஸ்தானமுமாய்ச் சிவ க்ஷேத்திரங்களுள் மேம்பட்டன ஆகலின், அங்கெழுந்து அருளியிருக்கும் விசேஷ சிவசத்திகளின் திருநாமங்களைச் சுட்டி அபிராமி தேவியை ஒன்று இடையிட்ட முற்செய்யுளானும் இச்செய்யுளானும் ஆசிரியர் விதந்து கூறிய வாறும். (70)

**அழகுக் கொருவரும் ஒவ்வாத வல்லி அருமறைகள்**
**பழகிச் சிவந்த பதாம்புயத் தாள்பனி மாமதியின்**
**குழவித் திருமுடிக் கோமள யாமளைக் கொம்பிருக்க**
**இழவுற்று நின்றநெஞ் சேயிரங் கேலுனக் கென்குறையே.**

இ - ள்: இழவு உற்று நின்ற நெஞ்சே — அருமையாகிய இம் மனிதப்பிறப்பான் அடையப்படும் பயனை இழந்தேமே என்று துக்கமுற்று ஒய்ந்து நிற்கின்ற என்மனமே! அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி — கட்டழகுக்குத் திருமகள் முதலிய பிறரொருவரும் தமக்கு நிகராத பொற்கொடியும், அருமறைகள் பழகிச் சிவந்த பத அம்புயத்தாள் — அருமையாகிய சைவோபநிஷத்துக்கள் பாதுகையாகி

வருடுதலினலே கன்றிச் சிவந்த பாத பதுமங்களையுடைய வரும், பனி மா மதியின் குழவித் திருமுடிக் கோமள யாமளைக் கொம்பு இருக்க — குளிர்ச்சியும் பெருமையும் பொருந்திய பிறை மதியைத் தரித்த திருமுடியினையும் எஞ் ஞான்றும் இளமைச் செவ்வி வாய்ந்த சாமளவர்ணத்தை யுமுடைய பொற்கொம்பர் போல்பவருமாகிய அபிராமி தேவி நமக்கு உயிர்த்துணையாயிருக்க, உனக்கு என்குறை — உனக்கு யாதுகுறை? ஒன்றுமில்லை ஆகலான், இரங்கேல் — நீ இனி இரங்காது ஒழிவாயாக. எ - று.

"இப்பிறவி தப்பினு லெப்பிறவி வாய்க்குமோ யாது வருமோ" என்று முத்தி வறுமை கூர்ந்து வருந்துகின்ற என் மனமே! அபிராமிதேவி நமக்குயிர்த் துணையாயிருக்க உனக் கென்னை கொல் குறையிருக்கின்றது? நீ இனி இரங்காது ஒழிவாயாக என்பதாம். (71)

**என்குறை தீரநின் றேத்துகின் றேனினி யான்பிறக்கின்**
**நின்குறை யேயன்றி யார்குறை காணிரு நீள்விசும்பின்**
**மின்குறை காட்டி மெலிகின்ற நேரிடை மெல்லியலாய்**
**தன்குறை தீரவெங் கோன்சடை மேல்வைத்த தாமரையே.**

இ - ள்: இரு நீள் விசும்பின் மின்குறை காட்டி மெலி கின்ற நேர் இடை மெல் இயலாய் — பெரிய நெடிய ஆகா யத்தின்கண் உள்ள மின்னலுக்கு ஒரு குறையைத் தான் மெலிந்து காட்டுகின்ற நேர்மையாகிய இடையினையும் மெல்லியல்பையும் உடைய அபிராமி தேவியே! எம்கோன் தன்குறை தீரச் சடைமேல் வைத்த தாமரை — பசுபதி யாகிய அமுதகடேசுரர் தம்முடைய குறை நிவிர்த்தியாகும் பொருட்டுத் தமது சடையின் மேல்வைத்து வணங்கிய உம்முடைய அருமைத் திருவடித்தாமரை மலர்களை, என்

குறைதீர நின்று ஏத்துகின்றேன் — என்குற்றம் தீரும்படி தமியேன் உம்முடைய சந்நிதானத்து நின்று தரிசித்து வணங்கித் துதிக்கின்றேன், இனி யான் பிறக்கின் — இனிப் பரமுத்தி யடையாது தமியேன் சனன மெடுக்கின், நின் குறை அன்றி யார்குறையே — அக்குற்றம் தேவரீரது குற்ற மன்றி மற்று யாவரது குற்றமோ, திருவாய் மலர்ந்தருளுக. எ - று.

காண் — முன்னிலையசை. காட்டி மெலிகின்ற என்பதனை மெலிந்து காட்டுகின்ற என விகுதி பிரித்துக் கூட்டுக; "அருங்கேடன்" என்புழிப்போல. மெலிந்து — மெலிதலால். என்குறை — தேவரீரை வழிபடாத குறை. நின்குறை — மோக்ஷந்தராத குறை. மின்குறை — மின்னற்கொடி கடிதின் மறைதலோடு தூலமாயிருக்கின்றது என்னுங் குறை. தன் குறை — கங்கா தேவியின் பொருட்டு நிகழ்ந்த ஊடற்கு ஏது வாகிய குறை. மெலியினும் நேர்மை தவறிற்றில்லை யென் பார் மெலிகின்ற நேரிடை என்றார்.

ஆண்டாள் அடிமை யென்னும் நம்மிருவேமுள் யான் அவ்வடிமைத்தொழிலைச் செய்து முடிக்கின்றேன்; தேவரீர் அவ்வாளுதற்றொழிலைச் செய்து முடியா தொழிதிராயின், குறை யாவர் பாலதோ! சொல்லியருளுக என்பதாம். (72)

**தாமங் கடம்பு படைபஞ்ச பாணந் தநுக்கரும்பு**
**யாமம் வயிரவ ரேத்தும் பொழுதெமக் கென்றுவைத்த**
**சேமந் திருவடி செங்கைக ணான்கொளி செம்மையம்மை**
**நாமந் திரிபுரை யொன்றோ டிரண்டு நயனங்களே.**

இ - ள்: அம்மை நாமம் திரிபுரை — அபிராமியம்மைக் குப் பரியாயநாமம் திரிபுரையும், நயனம் ஒன்றோடு இரண்டு — திருக்கண்கள் நெற்றிக்கண்ணொன்றுடன் மற்றி ரண்டு கண்களுமாகிய மூன்றும், செம் கைகள் நான்கு — சிவந்த திருக்கரங்கள் நான்கும், ஒளி செம்மை — நிறம்

செந்நிறமும், தாமம் கடம்பு — மாலை கடப்பமலர் மாலை யும், தநுக்கரும்பு — வில்லுக் கரும்பும், படை பஞ்ச பாணம் — படைக்கலம் பஞ்ச புஷ்ப பாணங்களுமேயாம்; ஏத்தும்பொழுது வயிரவர் யாமம் — அவரை நாம் விசேஷ மாகத் துதித்து வழிபடுங்காலம் க்ஷேத்திர பாலகர் சாவ தானமாகக் காக்கும் அர்த்தயாம காலமாம்; எமக்கு என்று வைத்த சேமம் திருவடி — அவர் எமக்கீந்தருளும் பொருட்டு வேறுவைத்திருக்கின்ற சேமநிதி தந்திருவடி களேயாம். எ - று.

ஆமென்னும் வினைப்பயனில்லையை வருவித்தொட்டுக. அர்த்தயாமம் திருவடி தீக்ஷைக்குரிய ஒடுக்க காலமாகலின், அது ஈண்டு ஆசிரியரால் விதந்தெடுத்துக் கூறப்பட்டது.

அபிராமிதேவி தியானமும், அவரை விசேஷமாக வழி படுங் காலமும், அவர் தம் மெய்யடியார்க்கு ஈந்தருளும் பேறுங் கூறியவாறு.

**நயனங்கள் மூன்றுடை நாதனும் வேதமு நாரணனும்**
**அயனும் பரவு மபிராம வல்லி யடியிணையைப்**
**பயனென்று கொண்டவர் பாவைய ராடவும் பாடவும்பொற்**
**சயனம் பொருந்து தபனியக் காவினிற் றங்குவரே.**

இ - ள்: மூன்று நயனங்கள் உடை நாதனும் — சோம சூரியாக்கினிகளாகிய மூன்று திருக்கண்களையுடைய தங் கணவராகிய சிவபெருமானும், நாரணனும் — விட்டுணு வும், அயனும் — பிரமாவும், வேதமும் பரவும் — சதுர் வேதமுந் துதிக்கின்ற, அபிராம வல்லி இணை அடியைப் பயன் என்று கொண்டவர் — அபிராமி தேவியினது உபய திருவடிகளை மறுமைப் பயனைத் தருவனவாமென்று உட் கொண்டு வழிபடும் அடியவர்கள், தபனியக் காவினில்

பொருந்தும் பொன் சயனம் — சுவர்க்கலோகத்துள்ள கற்பகச் சோலையிற் பொருந்தும் பொற்சயனத்தின் கண்ணே, பாவையர் ஆடவும் பாடவும் தங்குவர் — அரம்பை முதலிய தேவமகளிர் ஆடிப்பாட மறுமையிலே இந்திராதி தேவராகி வீற்றிருப்பர். எ - று.

பயன் தருவனவற்றைப் பயன் என்றது உபசாரம்.

மும்மூர்த்திகளும் வேதமும் துதிக்கும் அபிராமிதேவியின் பாதங்களை மறுமைப்பயன் மாத்திரையே கருதி வழிபடும் அடியவர் அவ்வாறே இந்திராதி தேவராகிக் சுற்பகச் சோலையில் அரம்பையர் ஆடிப்பாட பொற்சயனத்தின் கண் வீற்றிருப்பர். என்பதாகும். (74)

**தங்குவர் கற்பகத் தாருவி னீழலிற் றாயரின்றி**
**மங்குவர் மண்ணிற் வழுவாப் பிறவியை மால்வரையும்**
**பொங்குவ ராழியு மீரேழ் புவனமும் பூத்தவுந்திக்**
**கொங்கிவர் பூங்குழ லாடிரு மேனி குறித்தவரே.**

**இ - ள்:** கற்பகத்தாருவின் நீழலில் தங்கு உவர் — மேலே சொல்லிய பிரகாரம் கற்பகத் தருவின் நீழலிலே வீற்றிருக்கின்ற உந்தத் தேவர்களுக்குள்ளே, மால்வரையும் — பெரிய மலைகளையும், பொங்கு உவர் ஆழியும் — கிளருகின்ற அலைகளையுடைய உவர்க்கடல் முதலிய கடல்களையும், ஈரேழ் புவனமும் பூத்த உந்தி — பதினான்கு உலகங்களையும் பெற்ற திருவுதரத்தையும், கொங்கு இவர் பூங்குழலாள் திருமேனி குறித்தவரே — வாசனை பொருந்திய பூக்களை வைத்து முடித்த கூந்தலையுடைய அபிராமி தேவியினது திருமேனியை மோக்ஷத்தைக் குறித்து அங்கிருந்தும் தியானஞ் செய்தவர்கள், மண்ணில் பிறவியைத் தாயர் இன்றி வழுவா — இப்பூமியிலே இனிப்

பிறக்கும் பிறவியைத் தம்மைப்பெறும் தாயர் இல்லாது ஒழிய விலகி, மங்குவர் — அத்தேவியின் திருவடிகளை இரண்டறக் கலப்பர். எ - று.

மயங்குவர் எனற்பாலது எதுகை நோக்கி மங்குவர் என்றாயிற்று. மயங்குதல் — கலத்தல். அம் மயங்குதல் என்னும் வினைக்குத் திருவடிகள் என்னுஞ் செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது. ஆழியுமென எண்ணின் கணின்ற எச்சவும்மையான் ஏனைக் கடல்களும் என்பது பெற்றும். விதிமார்க்கத்திற் சிவலோக முதலிய பத முத்திகளி லிருந்தே மகானுபாவர் சிலர் பரமுத்தியடைவது போலத் தேவி பத்தி மார்க்கத்திலே சுவர்க்கம் முதலிய மேற் கதிகளிலிருந்து அதி பரிபக்குவராகிச் சிலர் பரமுத்தியடைதலுங்கூடும். என்பதாம்.

இச்செய்யுட்கு இங்ஙனம் பொருள்கூறாது வேறு கூறுவன எல்லாம் கூறியது கூறல் முதலிய குற்றத்துட் படுமாறு உய்த்து உணர்ந்துகொள்க. (75)

**குறித்தேன் மனத்தி னின்கோல மெல்லாநின் குறிப்பறிந்து**
**மறித்தேன் மறலி வருகின்ற நேர்வழி வண்டுகிண்டி**
**வெறித்தே னவிழ்கொன்றை வேணிப் பிரானொரு கூற்றைமெய்யிற்**
**பறித்தே குடிபுகு தும்பஞ்ச பாண பயிரவியே.**

இ - ள் : வண்டு கிண்டி வெறித்தேன் அவிழ்கொன்றை வேணிப்பிரான் ஒரு கூற்றை — வண்டுகள் குடைதலினாலே மணம் பொருந்திய தேன் ஒழுகப்பெறும் கொன்றை மாலையைத் தரித்த சடையையுடைய சிவபிரானது ஒரு பாகத்தை, மெய்யில் பறித்துக் குடி புகுதும் பஞ்சபாண பயிரவியே — அவரது திருமேனியினின்றும் வலிதிற் கவர்ந்து அதன்கட் குடிபுகுந்து அருளிய பஞ்சபுஷ்ப பாணங்களையுடைய அபிராமிதேவியே! நின்கோலம் எல்லாம் மனத்தில் குறித்தேன் — தேவரீருடைய திருக்கோலங்களை எல்லாம்

என்மனத்திலே எஞ்சாது தியானித்து வழிபட்டேன். நின் குறிப்பு அறிந்து — அங்ஙனம் வழிபட்டதமியேன் தேவரீரது உடம்பாட்டுத் திருவுள்ளக்குறிப்பை அறிந்து, மறலி வருகின்ற வழிநேர் மறித்தேன் — யமன் வருகின்ற மரண வழியை நேர் நின்று தடுத்துவிட்டேன். இஃதொருதலை. எ - று.

துணிவு பற்றி எதிர்காலம் இறந்தகாலமாயிற்று.

அபிராமிதேவியே? தேவரீரை ஆபாத சூட பரியந்தம் எஞ்சாது தியானித்து வழிபட்ட தமியேன் மாட்டு நுந்திருவருளான் யமன் ஒருபோதும் வரற்பாலனல்லன்; இஃதன்றோ என்துணிபு என்பதாம். (76)

**பயிரவி பஞ்சமி பாசாங் குசைபஞ்ச பாணிவஞ்சர்**
**உயிரவி யுண்ணு முயர்சண்டி காளி யொளிருங்கலா**
**வயிரவி மண்டலி மாலினி சூலி வராகியென்றே**
**செயிரவி நான்மறை சேர்திரு நாமங்கள் செப்புவரே.**

இ - ள்: பயிரவி — அச்சந்தருபவரும், பஞ்சமி— எங்கும் வியாபகரும், பாச அங்குசை — பாசத்தையும் அங்குசத்தையும் உடையவரும், பஞ்சபாணி — பஞ்சபாணங்களை யுடையவரும், வஞ்சர் உயிர் அவி உண்ணும் உயர் சண்டி — தாமதகுணமிக்க முடையவர்களது உயிர்ப்பலியை உண்ணும் மிக்க கோபவேகத்தையுடையவரும், காளி — கருநிறமுடைமையிற் காளியும், ஒளிரும் கலா வயிரவி — பிரகாசிக்கும் கலைகளின் வீரத்தையுடையவரும், மண்டலி — மண்டலத்தை யுடையவரும், மாலினி மலினத்தை யுடைவரும், சூலி — சூலத்தை யுடையவரும், வராகி என்று வைஷ்ணவியுமென்று, செயிர் அவி நால்மறைசேர் திருநாமங்கள் செப்புவர் — குற்றமற்ற நான்கு வேதங்களினுமுள்ள அபி

ராமிதேவியின் திருநாமங்களை மெய்யன்பர் சொல்லித் துதியாநிற்பர். எ - று.

பஞ்சம்—விரிவு. மலினம்—கறுப்பு; வராகி வராக சம்பந்தமுடையவர்; என்றது, விஷ்ணுவை அதிட்டித்து நின்று காத்தற்றொழிலை நிகழ்த்தும் வைஷ்ணவியை. இது வாராகி எனவும் வரும்.

ஈண்டுக்கூறிய நாமங்களுட்சில தேவியின் பரியாய நாமங்களாகியும், சில தேவியின் அமிச சம்பந்திகளாகிய பரிவார சத்திகளின் நாமங்களாகியும் அத்தேவியை உணர்த்துவனவாமென்று அபிராமிதேவியின் மெய்யன்பர் சொல்லித் துதிப்பாராகலின் யானும் அங்ஙனமே துதிப்பேன். என்பதாம். (77)

**செப்புங் கனக கலசமும் போலுந் திருமுலைமேல்**
**அப்புங் களப வபிராம வல்லி யணிதரளக்**
**கொப்பும் வயிரக் குழையும் விழியின் கொழுங்கடையுந்**
**துப்பு நிலவு மெழுதிவைத் தேனென் றுணைவிழிக்கே.**

இ - ள்: செப்பும் கனக கலசமும் போலும் — மாணிக்கரத்தினச் செப்பையும் சுவர்ண சலசத்தையும் போன்ற, திருமுலைமேல் அப்பும் களப அபிராமவல்லி அணி — திருமுலைகளின்மீது சாத்தும் சுகந்த வர்க்கக் கலவைகள் பொருந்திய அபிராமிதேவிக்குத் தெய்வச் சேடியர் கைபுனைந்த திருவாபரணங்களாகிய, தரளக் கொப்பும் — தரளத் தொங்கலையுடைய கொப்புவாளியையும், வயிரக் குழையும் — வயிரத் தோட்டையும், விழியின் கொழுங்கடையும் — அத்தேவியினது திருக்கண்களின் மதர்த்த கடைகளையும், துப்பும் — பவளம்போலும் திருவாயினையும், நிலவும்— திருப்புன்னகையாகிய சந்திரிகையையும், என் துணைவிழிக்கு எழுதிவைத்தேன் — தமியேன் என்னிரு கண்களி

னும் எழுதி வைத்தாற்போல உறைப்பத் தியானித்து வைத்துக்கொண்டேன். எ - று.

விழிக்கென்னும் நான்காவது தகுதிபற்றி ஏழாவதன் இடப்பொருட்கண் வந்து.

நம்மவர்களே! நீவிரும் அவ்வபிராமி தேவியினது திரு முகச் செவ்வியை அவ்வாறு மனத்திலுறுதியுறத் தியானித் துப் பதித்து வைமின்கள். என்பதாம். (78)

**விழிக்கே யருளுண் டபிராம வல்லிக்கு வேதஞ்சொன்ன**
**வழிக்கே வழிபட நெஞ்சுண் டெமக்கவ் வழிகிடக்கப்**
**பழிக்கே சுழன்றுவெம் பாவங்க ளேசெய்து பாழ்நரகக்**
**குழிக்கே யழுந்துங் கயவர்தம் மோடென்ன கூட்டினியே.**

இ - ள்: அபிராம வல்லிக்கு விழிக்கே அருள் உண்டு — அபிராமி தேவிக்குத் திருக்கண்களின் கண்ணே திருவருள் இருக்கின்றது. வேதம் சொன்னவழிக்கே வழிபட எமக்கு நெஞ்சு உண்டு — வேதங்கள் செய்க என்று விதித்தநன்னெறி யின் கண்ணே நின்று அத்தேவியை வழிபாடு செய்தற்கு எமக்கு மனமாகிய கருவியிருக்கின்றது, அவ்வழி கிடக்க—அந் நன்னெறி யிருக்கவும், பழிக்கே சுழன்று — இம்மையிலே பழிக்கப்படும் கொலை முதலிய செயலின் கண்ணே மனம் சுழன்று, வெம் பாவங்களே செய்து — கொடிய அப்பாவங் களையே இடையறாது செய்து, பாழ் நரகக் குழிக்கே அழுந் தும் கயவரோடு இனி என்ன கூட்டு — ஒருபயனுமற்ற நரகக் குழியின் கண்ணே விழிந்தழுந்துகின்ற கீழ்மக்களோடு இனி எமக்கென்ன சகவாசம்? எ - று.

வேதவிலக்கை விதியெனக் கொண்டு அனுசரித்து இருமை யின்பங்களையும் இழந்து நரகக் குழியின்கண்ணே விழும் கீழ் மக்களோடு கூடுதல் நல்லோர்க்கு ஒரு சிறிதும் அடாது என்பதாம்.

இருமை இன்பங்களையும் ஒருங்கிழந்து பாழாகிய நரகக் குழியின் கண்ணே விழ்ந்து அழுந்துமாறு பழிச்சொற்களைச் சரபோஜி மகாராஜாவினிடைப் பாராட்டிய இழிதொழில் ஸ்மார்த்தப் பார்ப்பன மக்களோடு இனி எமக்கென்ன சகவாசம் என்று, இவ்வாறு ஆசிரியரது சரித்திரத்தோடு ஒட்டியும் உரைத்துக்கொள்க. (79)

**கூட்டிய வாவென்னைத் தன்னடி யாரிற் கொடியவினை**
**ஓட்டிய வாவென்க ணோடிய வாதன்னை யுள்ளவண்ணங்**
**காட்டிய வாகண்ட கண்ணு மனமுங் களிக்கின்றவா**
**வாட்டிய வாநட மாடகத் தாமரை ஆரணங்கே.**

இ-ள்: ஆடகத் தாமரை ஆர் அணங்கு — பொற்றாமரை மலரில் வீற்றிருக்கின்ற அருமையாகிய அபிராமிதேவி, என்னைத் தன் அடியாரில் கூட்டியவா — தமியேனைத் தம்முடைய மெய்யடியார் வர்க்கத்தில் ஒருவனாகச் சேர்த்து அருளியவாறும், கொடிய வினை ஓட்டியவா — கொடிய என் இரு வினைகளையும் துரந்தருளியவாறும், என்கண் ஓடியவா — என்னிடத்து விரைந்து ஓடிவந்து அருளியவாறும், தன்னை உள்ள வண்ணம் காட்டியவா — தம்மை உள்ளபடி நனவிலே என் கண்களுக்குக் காட்டியருளியவாறும், கண்டகண்ணும் மனமும் களிக்கின்றவா — தம்மைக்கண்ட என் கண்களும் தியானித்த மனமும் களிகூருகின்றவாறுமாக, நாடகம் ஆட்டியவா — தமியேனைத் திருவருள் நாடகமொன்று ஆட்டி அருளியவாறு (சாலவும் வியக்கற்பாலதேயாம்). எ-று.

அபிராமிதேவி மார்ச்சார சம்பந்தமாகத் தாமே வலிய எழுந்தருளிவந்து தமியேனைப் பலதிறத்தானும் ஆட்கொண்டு அருளினமை சாலவும் வியக்கற் பாற்று என்பதாம்.

இனி இச்செய்யுளை ஆசிரியர் தமக்குச் சந்திரோதய விபத்து நேர்ந்தவழி அதனிவிர்த்திப் பொருட்டுத் தேவி பிரசன்னமான தருணத்துப் பாடியருளியதென அவ்வாசிரியர் சரித்திரத்தோடொட்டிப் பொருள் கொள்ளுங்கால், அணங்கே என்பதனை விளியாக்கியும், தன் என்பனவற்றை முன்னிலைப் புறமொழிகளாக்கியும், கொடியவினை என்பதைச் சரபோஜி மகாராஜாவால் நேர்ந்த விபத்து வினையாக்கியும், நடமாட்டியவா என்பதற்கு என் உண்மைகளை வெளிப்படுத்துதற்கே இவ்வாபத்து வினையொன்றை வருவித்து நடித்துக் காட்டியவாறுமாம் எனவும் உரைத்துக் கொள்க. இது, தேவி திருத்தோட்டை வீசியபோது பாடியது. (80)

**அணங்கே யணங்குக ணின்பரி வாரங்க ளாகையினல்**
**வணங்கே ளொருவரை வாழ்த்துகிலே னெஞ்சில் வஞ்சகரோடு**
**இணங்கே னெனதுன தென்றிருப் பார்சிலர் யாவரொடும்**
**பிணங்கே னறிவொன்றி லேனென்க ணீவைத்த பேரளியே.**

இ - ள்: அணங்கே — அபிராமிதேவியே! அணங்குகள் நின் பரிவாரங்கள் ஆகையினல் — ஏனைச்சத்திகள் தேவரீரைச் சேவிக்கும் பரிவார சத்திகளாதலினல், ஒருவரை வணங்கேன் வாழ்த்துகிலேன் — அச்சத்திகளுள் ஒருவரையும் தமியேன் வணங்குதலும் வாழ்த்துதலுஞ் செய்யேன், நெஞ்சில் வஞ்சகரோடு இணங்கேன் — முற்கூறிய மனக் கபடிகளோடு ஒருபோதும் சகவாசஞ் செய்யேன், அறிவு ஒன்று இலேன் — தமியேன் நல்லறிவு சிறிதும் இலனயினும், என்கண் நீவைத்த பேர் அளி — தமியேன் மாட்டுத் தேவரீர் செய்து வைத்தருளிய பெருங்கருணைத் திறத்தினல், எனது (என்றிருப்பார் சிலர்) — தேவரீரை என் சுதந்தர வஸ்து என்று தனித்தனி மதித்திருப்பார் சிலரும், உனது என்று இருப்பார் சிலர் — அவ்வஸ்து உன் சுதந்தர வஸ்து என்று தனித்தனி சொல்லியிருப்பார்

சிலருமாகிய, யாவரொடும் பிணங்கேன் — மெய்யடியார் அனைவரோடும் யான் கலாம் விளைக்காது சகவாசஞ் செய்திருப்பேன். எ - று.

எனது உனது என்றிருப்பார் சிலர் யாவரொடும் பிணங்கேன் என்பதற்கு, இவ்வாறன்றி என் உடல் பொருள் ஆவியாகிய மூன்று சுதந்தரவஸ்துவும் தேவியாகிய உன்னுடைய சுதந்தர வஸ்துவே என்று சமர்ப்பித்திருக்கும் மெய்ஞ்ஞானிகளாகிய சிலருடன், கலாம் விளைக்க மாட்டேன் எனப் பொருள் கோடலுமொன்று.

அபிராமிதேவியே! தேவரீரையும் தேவரீரது மெய்யடியாரையும் உம்முடைய திருவருள்வாயிலாக வணங்கி வாழ்த்திச் சகவாசஞ் செய்வதல்லது மற்றொருவரோடும் சகவாசஞ் செய்யேன், என்பதாம். (81)

அளியார் கமலத்தி லாரணங் கேயகி லாண்டமுநின்
ஒளியாக நின்ற வொளிர்திரு மேனியை யுள்ளுதொறுங்
களியாகி யந்தக் கரணங்கள் விம்மிக் கரைபுரண்டு
வெளியாய் விடினெங்ங னேமறப் பேனின் விரகினையே.

இ - ள். அளி ஆர் கமலத்தில் ஆர் அணங்கே — வண்டுகள் மொய்க்கின்ற வெண்டாமரை செந்தாமரை மலர்களில் வீற்றிருக்கும் அபிராமிதேவியே! அகில அண்டமும் நின் ஒளி ஆக நின்ற ஒளிர் திருமேனியை — சகல அண்டங்களும் தேவரீருடைய பிரகாசத்துக்குள் அடங்குவனவாக நிலை பெறுகின்ற, பிரகாசம் பொருந்திய உம்முடைய திருமேனியை, உள்ளுதொறும் — தமியேன் தியானிக்குந்தோறும், அந்தக் கரணங்கள் களி ஆகி விம்மிக் கரை புரண்டு வெளியாய்விடின் — என் அந்தக்கரணங்கள் ஆநந்தவெள்ளக் களிகூர்வனவாகிப் பொருமி ஏனைத் தத்துவக்கரைகளைக் கடந்து பரவெளியாய் அதீதநிலையை அடைவனவாயொழியின், நின் விரகினை எங்ஙனே றமப்

**பேன்** — தேவரீரது அதிசூக்கும **உபாயத்தை** எவ்வாற்றானே தமியேன் மறக்கற்பாலேன். எ - று.

நின்ற திருமேனி, ஒளிர் திருமேனி எனத் தனித்தனி கூட்டுக. அந்தக் கரணங்கள் உட்கருவிகளாகிய மனமுதலியன. இவைகளைத் தேவரீருடைய தியானத்திற்கு மாத்திரமே கருவியாக நிறுத்திக்கொண்டு, ஏனைவிடயங்களிற் பற்றவிடாமல் அதீத நிலையில் வைத்தருளிய தேவரீரது சூக்குமோபாயத்தை நினைந்து நினைந்து ஞாபகங் கூர்வதல்லது மறத்தல் யாண்டையது. என்பதாம். (82)

விரவும் புதுமல ரிட்டுநின் பாத விரைக்கமலம்
இரவும் பகலு மிறைஞ்சவல் லாரிமை யோரெவரும்
பரவும் பதமு மயிரா வதமும் பகிரதியும்
உரவுங் குலிசமுங் கற்பகக் காவு முடையவரே.

இ - ள். நின் விரை பாத கமலம் விரவும் புதுமலர் இட்டு — அபிராமிதேவியே! தேவரீருடைய நறுமணங்கமழுந் திருவடித் தாமரைமலர்களுக்குத் தேன் பொருந்திய அன்றலர்ந்த புதிய புஷ்பங்களால் அருச்சனைசெய்து, பகலும் இரவும் இறைஞ்ச வல்லார் — அகோராத்திரம் இம்மையில் அத்திருவடிகளை வணங்கி வழிபட வல்லுநராகிய அடியவர்கள், இமையோர் எவரும் பரவும் பதமும் — தேவர்கள் அனைவரும் பரந்திருக்கும் சுவர்க்க லோக பதத்தையும், அயிராவதமும் — அயிராவத யானையையும், பகீரதியும் — ஆகாய கங்காநதியையும், உரவும் குலிசமும் — வலிமைபொருந்திய வச்சிரத்தையும், கற்பகக்காவும் — கற்பகச் சோலையையும், உடையவரே — உடைய இந்திரரேயாவர். எ - று.

ஆக்கச்சொற் றொக்குநின்றது. பரவல்துதித்தலுமாம்.

அபிராமிதேவியே! தேவரீருடைய திருவடிகளை மறுமை யின்பங் குறித்து இம்மையிலே அருச்சனைசெய்து வழிபடுகின்ற அடியவர்கள் சுவர்க்கலோக முதலிய தசாங்கங்களையுமுடைய இந்திரராதல் ஒருதலை. என்பதாம். (83)

உடையாளை யொல்கு செம்பட் டுடையாளை யொளிர்மதிச்செஞ்
சடையாளை வஞ்சகர் நெஞ்சடை யாளைத் தயங்கு நுண்ணூல்
இடையாளை யெங்கள் பெம்மா னிடையாளை யிங்கென்னையினிப்
படையாளை யுங்களை யும்படை யாவண்ணம் பார்த்திருமே.

இ-ள்: உடையாளை — தமியேனை அநாதியே அடிமை யாக உடையவரும், ஒல்கு செம்பட்டு உடையாளை — துவளுகின்ற (திருமருங்கிலே) சிவந்த பட்டுடையினை யுடைய வரும், மதி ஒளிர் செம் சடையாளை — ஞானசந்திரன் பிரகாசிக்கும் சிவந்த சடையினையுடையவரும், வஞ்சகர் நெஞ்சு அடையாளை — கபடிகளது மனத்தில் அடையாத வரும், தயங்கு நுண் நூல் இடையாளை — விளங்குகின்ற நுட்பமாகிய நூல்போன்ற சிறிய இடையினையுடையவரும், எங்கள் பெம்மான் இடையாளை — எம்முடைய சிவபெரு மானது வாமபாகத்தை யுடையவரும், என்னை இனிப் படையாளை — தமியேனை இனிச் சிருட்டியாதவரும் (ஆகிய அபிராமிதேவியை), உங்களையும் படையாதவண்ணம் இங்குப் பார்த்தே இரும் — நம்மவர்களே உங்களையும் சிருட்டியாத பிரகாரம் அத்தேவியை இம்மையிலே சதா தியானஞ் செய்துகொண்டேயிருங்கள். எ - று.

ஒல்கென்னும் வினைக்குறிப்பால் இடையென்னும் வினை முதல் வருவிக்கப்பட்டது; கொய்சகமாகச் சுருக்கிவிடப் பட்ட செம்பட்டுடை எனினும் அமையும். இடை - இடப் பக்கம். இச்செய்யுள் சொற்பின்வருநிலையணியின்பாற் பட்டுப் பிராசநயந் தோன்ற நிற்றலும், ஈற்றடியில் வகை

யுளி வாய்ந்து, திலகக் கலித்துறையின் பாற்படுதலும் தெளிக. பிராசம் சந்தம். வகையுளியாவது ஒரு சொல் பிளவுபட்டு நின்ற சீர்ற்றினும் வருஞ்சீர் முதலினும் வியாபிப்பது.

அபிராமிதேவியே இம்மையிலே மோக்ஷத்தைக் குறித்துத் தம்மைச் சதாதியானஞ் செய்து வழிபடும் மெய்யடியார்களுக்கு அம்மோக்ஷத்தைக் கொடுத்தலும் ஒருதலை எனக்கூறி, ஏனையோரையும் அவ்வாறு செய்து மோக்ஷமடையக் கடவீரெனத் தந்துணிபுரைத்து வற்புறுத்தியவாறு. (84)

பார்க்குந் திசைதொறும் பாசாங் குசமும் பனிச்சிறைவண்டு
ஆர்க்கும் புதுமல ரைந்துங் கரும்புமென் னல்லலெல்லாந்
திர்க்குந் திரிபுரை யாடிரு மேனியுஞ் சிற்றிடையும்
வார்க்குங் குமமுலை யும்முலை மேன்முத்து மாலையுமே.

இ-ள். பார்க்கும் திசைதொறும் — தமியேன் நோக்குந் திக்குக்கள்தோறும், என் அல்லல் எல்லாம் தீர்க்கும் திரிபுரையாள் — என் சனன மரணத்துன்பங்கள் பலவற்றையும் நீக்கும் திரிபுரசுந்தரியினது, திருமேனியும் — திருமேனியும், சிற்றிடையும் - சிறுமையாகிய திருமருங்குலும், வார்க் குங்கும முலையும் - கச்சணிந்த குங்குமக் கோலத்தையுடைய திருமுலைகளும், முலைமேல் முத்துமாலையும் - அத்திருமுலைகளின்மீது தங்கிய முத்துமாலையும், பாச அங்குசமும் — பாசஅங்குசங்களும், கரும்பும் — கருப்புவில்லும், சிறைவண்டு ஆர்க்கும் பனி புதுமலர் ஐந்துமே — சிறகுகளையுடைய வண்டுகள் சப்திக்கும் குளிர்ச்சி பொருந்திய புதிய புஷ்பபாணங்கள் ஐந்துமே தோன்றுகின்றன. எ-று.

தோன்றுகின்றன என்னும் பயனிலை அவாய்நிலையான் வருவிக்கப்பட்டது.

அன்பு மிகுதியோடு உறைப்பத் தியானிக்குந் தியானப் பயிற்சிவயத்தான் உளதாகிய அம்மை உருவெளித் தோற்றமே பார்த்தவிடமெங்குந் தோன்றுகின்றது என ஆசிரியர் தம்மநுபவங் கூறியவாறு. (85)

மாலயன் றேட மறைதேட வானவர் தேடநின்ற
காலையுஞ் சூடகக் கையையுங் கொண்டு கதித்தகப்பு
வேலைவெங் காலனென் மேல்விடும் போதுவெளி நில்கண்டாய்
பாலையுந் தேனையும் பாகையும் போலும் பணிமொழியே.

இ - ள். பாலையும் தேனையும் பாகையும் போலும் பணிமொழியே — பசுவின் பாலையும் கொம்புத் தேனையும் சக்கரைப்பாகையும் போலும் பணிவைப் புலப்படுத்தும் மாதுரியச் சொற்களையுடைய அபிராமிதேவியே! வெம் காலன் கதித்த கப்புவேலை என்மேல் விடும்போது — கொடிய யமன் கொலைக்கருவிகளுக்குள் மேம்பட்ட முத்தலை பொருந்திய சூலவேலை என்மேற் பிரயோகிக்கும் போது, மால் அயன் தேட — விட்டுணு பிரமாக்கள் தேடவும், வானவர் தேட — மற்றைத் தேவர்கள் தேடவும், மறை தேடநின்ற — வேதங்கள் தேடவும் அப்பாற்பட்டு நின்ற, காலையும் - அருமைத் திருவடிகளையும், சூடகக் கையையும் கொண்டு — சங்கவளையல்களைத் தரித்த திருக்கைகளையுமுடன்கொண்டு, வெளி நில் — என்முன் வெளி வந்து நின்றருளும். எ - று.

கண்டாய் என்பது முன்னிலையசை.

யமனைப் புடைத்தற்குக் கையையும் உதைத்தற்குக் காலையும் உடன்கொண்டு வரும்படி அவ்விரண்டையும் விதந்தெடுத்து வேண்டிக் கொண்டனர் என்க. இனிக் கையையுங் கொண்டு என்பதற்கு, குற்றுதற்குக் கையின் கட் சூலத்தையும் கொண்டு என் ஆகுபெயராக்கியுரைப் பினு மமையும். பனிமொழி எனவும் பாடம்.

அபிராமிதேவியே! என் மரணகாலத்தில் யமனைத் தண்டிக்கும் கருவிகளோடும் என்முன் வெளிவந்து நின்றருளும். என்பதாம். (86)

மொழிக்கும் நினைவுக்கு மெட்டாத நின்றிரு மூர்த்தியென்றன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்ற தால்விழி யான்மதனை
அழிக்குந் தலைவ ரழியா விரதத்தை யண்டமெல்லாம்
பழிக்கும் படியொரு பாகங்கொண் டாளும் பராபரையே.

இ-ள். விழியால் மதனை அழிக்கும் தலைவர் அழியா விரதத்தை — நெற்றிக்கண்ணன் மன்மதனை எரித்தழித்த அகில சாதுரியராகிய நும்பிராண நாயகரது மற்றொருவராலும் அழிக்கத் தகாத யோகநியமத்தை, அண்டம் எல்லாம் பழிக்கும்படி ஒருபாகம் கொண்டு ஆளும் பராபரையே — சர்வலோகத்தவர்களும் பழித்துரைக்கும்படி அவரது வாமபாகத்தைக் கைக்கொண்டு வாசஞ்செய்த மாயாதீதையாகிய அபிராமிதேவியே! மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத நின் திருமூர்த்தி — விட்டுணு பிரமா முதலிய தேவர்களது வாக்கிற்கும் தியானத்திற்கும் அதீதமாகிய தேவரீருடைய திருமேனி, என் விழிக்கும் வினைக்கும் வெளி நின்றது - தமியேனது ஊனக்கண்களுக்கும் சிற்றறிவுச் சிறுபூசனைத் தொழிற்கும் எளிவந்து வெளிப்பட்டு நிற்கின்றது. (இஃதென்னை கொலற்புதம்!!) எ-று.

மூர்த்தி — திருமேனி.

எத்துணையும் உயர்ந்த உமது திருமேனி எத்துணையும் தாழ்ந்த தமியேனது ஊனக்கண்களுக்குப் பூசாகாலத்தில் எளிவந்து வெளிநின்றருளியது பெரிதும் வியக்கற்பால தொன்றே. என்பதாம். (87)

பரமென் றுனையடைந் தேன்றமி யேனுமுன் பக்தருக்குள்
தரமன் றிவனென்று தள்ளத் தகாது தரியலர்தம்
புரமன் றெரியப் பொருப்புவில் வாங்கிய போதிலயன்
சிரமொன்று செற்றகை யானிடப் பாகஞ் சிறந்தவளே.

இ-ள். தரியலர்தம் புரம் அன்று எரிய — ஆன்ம வைரிகளாகிய அசுரர்களது முப்புரங்களும் அக்காலத்து அக்கினிபற்றி எரியுமாறு, பொருப்பு வில் வாங்கிய — மேருகிரியை வில்லாகவளைத்த, போதில் அயன் சிரம் ஒன்று செற்ற கையான் — செந்தாமரைப்பூவிலிருக்கின்ற பிரமாவினது தலைகளிலொன்றை நகத்தாற் கிள்ளியழித்த திருக்கரத்தையுடைய சிவபெருமானது, இடப்பாகம் சிறந்தவளே — வாமபாகத்தின்கட் சிறந்து வீற்றிருக்கின்ற அபிராமிதேவியே! தமியேனும்பரமென்று உனை அடைந்தேன் — தமியேனும் என்பாரம் முழுவதும் உம்முடைய பாரமேயென்று சமர்ப்பித்து உம்மைச் சரணடைந்தேன் ஆதலின், உன் பத்தருக்குள் இவன் தரம் அன்று என்று தள்ளத் தகாது — அவ்வாறு சரணடைந்த தமியேனை இனித் தேவரீருடைய மெய்யன்பர்களுட் சேர்த்தற்கு இவன் தகுதியுடையனல்லனென்று தள்ளிவிடின், அது நும் திருவருட்பெருமைக்குத் தகாது. எ-று.

தள்ளின் என்பது தள்ள எனத்திரிந்து நின்றது. தம்மென்பது கட்டுரைச்சுவைக்கண் வந்தது. வாங்கிய கை, செற்றகை எனத்தனித்தனி முடிக்க. பரம் - பாரம்; என்றது, உடல் பொருள்ஆவிமூன்றையும். அவற்றுள் ஈண்டுப் பொருளென்றது சஞ்சித பிராரத்த ஆகாமியங்களை. இனிப் பரமென்பதற்குப் பரம்பொருள் என்று உரைப்பாருமுளர். தமியேனுமென்னுஞ் சிறப்பும்மை எச்சமுமாய் நின்றது. தள்ளப்பெருதரியாவவுணர் எனவும் பாடம்.

தள்ளிவிடின், தமியேன் அதோகதி யடைவேனுதலின், அது தேவரீருடைய திருவருட் பெருமைக்குத் தகாது. என்பதாம். (88)

சிறக்குங் கமலத் திருவேநின் சேவடி சென்னிவைக்கத்
துறக்கந் தருநின் றுணைவரு நீயுந் துரியமற்ற
உறக்கந் தரவந் துடம்போ டுயிருற வற்றறிவு
மறக்கும் பொழுதென் முன்னேவரல் வேண்டும் வருந்தியுமே.

இ-ள். சிறக்கும் கமலத் திருவே — நால்வகைப் பூக்களுட் சிறந்து விளங்கும் செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் மகாலக்குமியை அதிட்டித்து நின்றருளும் அபிராமிதேவியே! நின் சேவடி சென்னி வைக்கத் துறக்கம் தரும் நின் துணைவரும் நீயும் — தேவரீர் உம்முடைய சிவந்த திருவடியைச் சிரசில் வைத்துத் தீக்ஷித்தற்குப் பரிபக்குவம் வரும்பொருட்டு, தம்மன்பர்களுக்கு இருவகைப் பற்றும் துறத்தலைத் தந்தருளும் நும்பிராணநாயகராகிய சிவபெருமானும் தேவரீருமாக, உடம்போடு உயிர் உறவு அற்று அறிவு மறக்கும் பொழுது — என் உடம்பும் உயிரும் சம்பந்தமற்று, அறிவு நும்மிருவரையும் மறக்கப் புகும் மரணகாலத்தின் கண்ணே, துரியம் அற்ற உறக்கம் தர வருந்தியும் வந்து — துரியாதீத நிலையின்கண் உள்ள ஆன்மபோதமற்ற சிவாநுபோகத் தூக்கத்தைத் தமியேனுக்குத் தந்தருளும் பொருட்டுத் திருவடி வருந்தியும் எழுந்தருளிவந்து, என் முன்னே வரல் வேண்டும் — தமியேனுக்கெதிரே சமீபித்தல் வேண்டும். எ-று.

சிறக்குங்கமலம் நெஞ்சக்கமலம் எனினுமமையும். துறக்கம் - ஈண்டுத் துறத்தல். அபிராமிதேவி திருவடி தீக்ஷை செய்தற்குப் பரிபக்குவம் வரும்பொருட்டுச் சிவபெருமான் தம்மன்பர்களுக்கு இருவகைப் பற்றறுதியையும் கொடுத்தருளுவர் என்றது, அவ்விருவரும்வேறல்லர், உண்மைநிலையை உற்றுநோக்குங்கால் ஒருவரே என்பது

விளக்குதற்பொருட்டே யாம், என்க. மறக்கும்பொழுது என்முன்னே வரல்வேண்டுமெனவே, அங்ஙனம் வரின், மற வாமலே இவ்வுயிர் உடம்பைவிட்டு நீங்கும் என்பதும், அதனால் முத்தி சித்திக்கும் என்பதும் தமதுட்கோளாகக் கொண்டிங்ஙனம் கூறினர் என்பதும் பெற்றாம். (89)

வருந்தா வகையென் மனத்தா மரையினில் வந்துபுகுந்து
இருந்தாள் பழைய விருப்பிட மாக வினியெனக்குப்
பொருந்தா தொருபொரு ளில்லைவிண் மேவும் புலவருக்கு
விருந்தாக வேலை மருந்தா னதைநல்கு மெல்லியலே.

இ-ள். வேலை மருந்தானதை — பாற்கடலிலே தோன்றிய எய்துதற்கரிய அமிர்தமானதை, விண் மேவும் புலவருக்கு விருந்தாக நல்கும் மெல் இயல் — சுவர்க்க லோகத்திலிருக்கும் தேவர்களுக்கு (இத்திருக்கடவூரிலே) விருந்தாக (விட்டுணு) கொடுத்தற்குத் தாம் முக்கிய காரணராயிருந்தருளிய அபிராமிதேவி, வருந்தாவகை — யான் இனிச் சனன மரணங்களில் அகப்பட்டு வருந்தாத பிரகாரம், என் மனத் தாமரையினில் வந்து — என் இரு தயகமலத்தின் கண்ணே எழுந்தருளிவந்து, பழைய இருப்பு இடமாகப் புகுந்து இருந்தாள் — பழைய உறை விடமே இடமாக இதன்கட் புகுந்து இருந்தருளினார், இனி எனக்குப் பொருந்தாது ஒரு பொருள் இல்லை — அதனால் இனி எனக்குக் கிடைக்காததொரு பொருளு மில்லை. எ - று.

இருதயகமலம் முன் பொதுவியாபகத்திற் கிடமாக விருந்துபின் விசேஷவியாபகத்துக் கிடமாகுகைபற்றி, அத னைப் பழைய இருப்பென்றும், இனிப் பரமுத்தியும் எய்து தற்கரிய தொன்றன் றென்பார் பொருந்தாதொருபொரு ளில்லையென்றுங் கூறினர். பொருந்தாதது என்னும் வினை யாலணையும் பெயர் விகாரவகையாற் பொருந்தா தென் றாயிற்று. முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. திருக்கட

லூரிலே தேவர்களுக்கு விட்டுணு அமிர்தம் பகிர்ந்து கொடுத்தற்கு அபிராமிதேவி முக்கிய காரணராயிருந் தருளிய சரித்திர விரிவை அத்தலபுராணத்துட் காண்க. ஈண்டு விரிக்கிற் பெருகும்.

அபிராமிதேவி என் இருதயத்திற் பாலில் நெய்போலச் சாமானிய வியாபகமன்றித் தயிரில் நெய்போல விசேஷ வியாபகமாய் வீற்றிருத்தலின், யான் இனி முத்தியெய் துதல் ஒருதலை என்பதாம். (90)

மெல்லிய நுண்ணிடை மின்னனை யாளை விரிசடையோன்
புல்லிய மென்முலை பொன்னனை யாளைப் புகழ்ந்துமறை
சொல்லிய வண்ணந் தொழுமடி யாரைத் தொழுமவர்க் நப்
பல்லிய மார்த்தெழ வெண்பக டூரும் பதந்தருமே.

இ-ள். மெல்லிய நுண் இடை மின் அனையாளை — மிருதுவாகிய நுண்ணிய திருமருங்குல் மின்னற்கொடி போல்பவரும், விரிசடையோன் புல்லிய மெல்முலைபொன் அனையாளை — விரிந்த சடையினையுடைய சிவபெருமான் தழுவுகின்ற மென்மையாகிய திருமுலை பொற்பிதிர் போல் பவருமாகிய அபிராமிதேவியை, மறை புகழ்ந்து சொல்லிய வண்ணம் தொழும் அடியாரைத் தொழும் அவர்க்கு — வேதந்துதித்துக் கூறிய பிரகாரம் வழிபடும் அடியவரை வழிபடும் அவ்வடியார்க்கு அடியவர்க்கு, பல் இயம் ஆர்த்து எழவெண் பகடு ஊரும் பதம் தரும் — பல வாத்தியங்கள் ஒலித்தெழாநிற்ப வெண்ணிறம் பொருந் திய அயிராவத யானையை வாகனமாகக்கொண்டு செலுத் தும் இந்திர பதத்தை அத்தேவி கொடுத்தருளுவர். எ - று.

எழ ஊருமென முடிக்க. பொன் — ஆகுபெயர். இடை மின் அனையாள் எனவும், முலை பொன் அனையாள் எனவும், சினைவினைகள் முதன்மேனின்றன. அவ்வணக்கந்தருமென

வருவித்து எழுவாயாகக் கோடலும் ஒன்று. பல்லியத்தை ஒருசொல்லெனக் கொள்ளினும் அமையும்.

அபிராமிதேவி தம்மடியார்க்கு அடியார்க்கு இந்திரபதத்தைக் கொடுத்தருளுவர். என்பதாம். (91)

பதத்தே யுருகிநின் பாதத்தி லேமனம் பற்றியுன்றன்
இதத்தே யொழுக வடிமைகொண் டாயினி யாவொருவர்
மதத்தே மதிமயங் கேனவர் போன வழியுஞ்செல்லேன்
முதத்தேவர் மூவரும் யாவரும் போற்று முகிழ்நகையே.

இ-ள். முதத் தேவர் மூவரும் யாவரும் போற்றும் முகிழ் நகையே — முத்தொழின் மகிழ்ச்சியுடைய தேவர்களாகிய முப்மூர்த்திகளும் மற்றை அனைவரும் வணங்கித் துதித்தற்கு ஏதுவாகிய திருப்புன்னகையையுடைய அபிராமிதேவியே! மனம் பதத்துநின் பாதத்தில் உருகிப் பற்றி — என் மனம் பக்குவப் பட்டுத் தேவரீருடைய திருவடிகளிலே நெக்குநெக்குருகி அவாவி, உன் இதத்தே ஒழுக அடிமை கொண்டாய் — உம்முடைய திருவருள்வழி நிற்றலாகிய உரிமை நெறியின் கண்ணே ஒழுகுமாறு அடித்தொண்டு கொண்டருளினீர் (ஆதலான்), இனி ஒருவர் மதத்தே மதி மயங்கேன் — இனித் தமியேன் மற்றொருவருடைய சமயத்தின் கண்ணே புத்தி மயங்கேன், அவர் போன வழியும் செல்லேன் — அவ்வன்னிய மதத்தவர் போன வழியினும் பிரவேசியேன். எ-று.

ஈண்டுப் பதத்தல் பிரபஞ்சத்தை உவர்த்து விடுதலின் மேற்று. இதம் — உரிமைப்பாடு. முதம் — மகிழ்ச்சி; ''புந்தியின் முதமெய்தி — இந்திரன் றிருப்பெற்றிடு ஞான்றினுமினிதுற்றான்'' என்பதனானு மறிக. முதற்றேவர் எனவும் பாடம்.

அபிராமிதேவியே! தேவரீர் மார்ச்சார சம்பந்தமாக வந்து தமியேனை வலிய அடிமைகொண்டமையினால், இனித்

தமியேன் மற்றொரு கடவுளது அந்நிய மதத்திற் புத்தி மயங்கி ஒருபோதும் பிரவேசியேன். என்பதாம். (92)

நகையே யிஃதிந்த ஞாலமெல் லாம்பெற்ற நாயகிக்கு
முகையே முகிழ்முலை மானே முதுகண் முடிவிலந்த
வகையே பிறவியும் வம்பே மலைமக ளென்பதுநாம்
மிகையே யிவடன் றகைமையை நாடி விரும்புவதே.

இ - ள். இந்த ஞாலம் எல்லாம் பெற்ற நாயகிக்கு — இவ்வுலகங்களை யெல்லாம் பெற்றருளிய சர்வலோகைக நாயகியாகிய அபிராமிதேவிக்கு, முகிழ்முலை முகையே — திருமார்பில் அரும்பிய திருமுலைகள் செந்தாமரையின் பேரரும்புகளே, முது கண் மானே — பழைமையாகிய திருக்கண்கள் மருண்டமானுக்கமே, முடிவில் இஃது நகையே — என்றிங்ஙனங் கூறுவது சைவசித்தாந்தமாகிய முடிவின் கட் சிரிப்புக்கிடமேயாம், அந்த வகையே பிறவியும் வம்பே — அந்தப்பிரகாரமே அவர் திருவவதாரமும் பொய் யேயாம், ஆதலால், நாம் மலைமகள் என்பதும்மிகையே — அத்தேவியை நாம் பர்வதராசபுத்திரி என்பதும் குற்றமே யாம், இவள் தன்கைமையை நாடி விரும்புவதே — (மற் றென்னையோ செயற்பாலதெனின்?) அது, இத்தேவியின் உண்மைத் தன்மையை முதனூல்களான் அனுபவமுடைய தேவியின் உண்மைத் தன்மைடைய முதனூல்களான அநுபவ முடைய தேசிகர்பால் ஆராய்ந்து மேலும் விருப்பங்கூர் வது ஒன்றுமேயாம். எ - று.

வம்பு - நிலையின்மை.

அபிராமிதேவிக்குக் கவிஞர் உருவகவுவமை முதலிய வற்றுற், புனைந்துரைப்பன வெல்லாம் கற்பனையாகலின், அக்கற்பனைகளைக் களைந்து முதனூல்கள் வாயிலாக அத்

தேவியின் உண்மை நிலையை உள்ளபடியறிந்து மேலும் மேலும் அவ்வம்மையிடத்துப் பத்திகூர்வதொன்றுமே செய்து கோடற்பாலது. என்பதாம். (93)

விரும்பித் தொழுமடி யார்விழி நீர்மல்கி மெய்புளகம்
அரும்பித் ததும்பிய வாநந்த மாகி யறிவிழந்து
சுரும்பிற் களித்து மொழிதடு மாறிமுன் சொன்னவெல்லாந்
தரும்பித்த ராவரென் றாலபி ராமி சமயநன்றே.

இ - ள். விரும்பித் தொழும் அடியார் — தம்மை விரும்பி வழிபடும் மெய்யடியார்கள், விழிநீர் மல்கி — கண்களிலே ஆநந்த பாஷ்பம் பெருகியும், மெய் புளகம் அரும்பி — சரீரம் புளகமரும்பியும், ததும்பிய ஆநந்தம் ஆகி — நிறைந்து வழிகின்ற ஆநந்த வெள்ளமயமாகியும் அறிவு இழந்து — ஆன்மபோதம் இழந்தும், சுரும்பில் களித்து — தேன் உண்டு தெவிட்டிய வண்டுபோலக் களிகூர்ந்தும், மொழி தடுமாறி — சொற்கள் தழுதழுத்தும், முன் சொன்ன எல்லாம் தரும் பித்தர் ஆவர் என்றால் — மேற்சொல்லிய இவைகளெல்லாவற்றையுந் தரும் பித்தாதிக்கத்தை உடையவரைப் போல்வாரென்றால், அபிராமி சமயமே நன்று — அதற்கேதுவாகிய அவ்வபிராமி தேவியினது சைவசமயம் ஒன்றுமே உலகிற் சாலச் சிறந்தது. எ - று.

புளகம் — மயிர் சிலிர்த்தல். ததும்பிய என்பதனைச் செய்யிய வென்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக் கோடலுமொன்று.

அபிராமிதேவியை விரும்பித்தொழும் அடியவர்கள் கண்டுக் கூறிய சிவாநந்த மெய்ப்பாடுகளெல்லாம் எய்தப்பெறுதல் கண்கூடாகலின், அத்தேவியின் சைவசமயம் ஒன்றுமே மெய்ச்சமயம் என்பதாம்.

ஆசிரியர் தஞ்சைச் சரபோஜி மகாராஜன் முன்னிலேயில் அமாவாசையைப் பூரணையென மாறிக்கூறியதற்கு ஏது. சுமார்த்த விரோதிகள் கூறும் வாமசமயக் கோட்பாடன்று. இவ்வாறந்த மீதூர்ச்சியே ஏது என விளக்கியதே இச்செய்யுட் கருத்தெனக் கோடலுமாம். (94)

நன்றே வருகினுந் தீதே விளேகினு நானறிவது
ஒன்றேயு மில்லே யுனக்கே பரமெனக் குள்ளவெல்லாம்
அன்றே யுனதென் றளித்துவிட் டேனழி யாதகுணக்
குன்றே யருட்கட லேயிம வான்பெற்ற கோமளமே.

இ - ள். அழியாத குணக் குன்றே — அநாதியாக ஒரு சிறிதுஞ் சலியாத குணமேருவே! அருட்கடலே கிருபா சமுத்திரமே! இமவான் பெற்ற கோமளமே — இமயமலே அரசன் பெற்ற என்றும் இளமைச் செவ்விவாய்ந்த அபிராமி தேவியே! எனக்கு உள்ள எல்லாம் அன்றே உனது என்று அளித்துவிட்டேன் — எனக்கென்றுள்ள உடல் பொருள் ஆவி மூன்றையும் தமியேனுக்குத் தேவரீர் காட்சி கொடுத்தருளிய அன்றைக்கே உம்முடையவைகள் என்று சமர்ப்பித்துவிட்டேன். ஆதலால், நன்றே வருகினும் — நன்மையே சம்பவிக்கினும், தீதே விளேகினும் அல்லது தீமையே சம்பவிக்கினும், நான் அறிவது ஒன்றேயும் இல்லே — அவைகளேக் குறித்து நான் சிந்திக்கத் தகுவது ஒன்றுயினுமில்லே, உனக்கே பரம் — என்பாரமெல்லாம் உமக்கே பாரம். எ - று.

உனதென்பது பன்மையொருமை மயக்கம்

"அன்றே யென்றனுவியு முடலு முடைமை யெல்லாமுங்
குன்றே யனேயா யென்னேயாட் கொண்டபோதே கொண்டிலேயோ
இன்றோ ரிடையூ றெனக்குண்டோ வெண்டோண்முக்க ணெம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானேவிதற்கு நாயகமே."

— திருவாசகம்

எனப் பிறரும் இங்ஙனங் கூறுதல் காண்க.

அபிராமிதேவியே! என் உடல்பொருளாவி மூன்றை யும் அன்றே உமக்கென்று தமியேன் சமர்ப்பணஞ் செய்து விட்டேன். ஆதலால் என்பாரம் எல்லாம் நும்பாரமேயா மாதலின், நிகழும் நன்மை தீமைகளைக்குறித்து நான் சிந்திக்கற்பால தொன்றேனுமில்லை. என்பதாம். (95)

கோமள வல்லியை யல்லியந் தாமரைக் கோயில்வைகும்
யாமள வல்லியை யேதமி லாளை யெழுதரிய
சாமள மேனிச் சகல கலாமயி றன்னைத்தம்மால்
ஆமள வுந்தொழு வாரெழு பாவுக்கு மாதிபரே.

இ-ள். **அல்லி அம் தாமரைக் கோயில் வைகும் கோமளவல்லியை** — அகவிதழ் பொருந்திய செந்தாமரை மலராகிய கோயிலில் வீற்றிருக்கும் என்றும் இளமைச் செவ்வி பொருந்திய காமவல்லி போல்பவரும், **யாமள வல்லியை** — யாமளவேதக் கொழுந்துபோல்பவரும், **ஏதம் இலாளை** — ஒரு குற்றமும் இல்லாதவரும், **எழுது அரிய சாமள மேனிச் சகலகலா மயில் தன்னை** — ஓவியரும் சித்தி ரித்தற்கரிய பசுமையாகிய திருமேனியையுடைய சகலகலா மயிலுமாகிய அபிராமிதேவியை, **தம்மால் ஆம் அளவும் தொழுவார்** — தம்மால் இயன்றவரையும் வழிபடும் அடிய வர்கள், **எழு பாருக்கும் ஆதிபர்** — ஏழுலகங்களுக்கும் அதிபதிகளாவார்கள். எ - று.

எழுது — முதனிலைத் தொழிற்பெயர் ஆக்கச் சொற் றொக்கு நின்றது. சகலகலாமயில் — சகலகலைகளுக்கும் அதி தெய்வமாகிய சாயலானும், பஞ்சவர்ணங்களானும் மயிலை யொத்தவர்.

ஈண்டு யாமளமென்றது உருத்திர யாமளத்தை. அபி ராமி தேவியைத் தம்மாலியன்றவரையும் வழிபடுமடிய வர்கள் பூலோக முதலிய மேலேழுலகங்களுக்கும் அதிபதி களாவார்கள் என்பதாம். (96)

ஆதித்த னம்புலி யங்கி குபேர னமரர்தங்கோன்
போதிற் பிரமன் புராரி முராரி பொதியமுனி
காதிப் பொருபடைக் கந்தன் கணபதி காமன்முதற்
சாதித்த புண்ணிய ரெண்ணிலர் போற்றுவர் தையலையே.

இ-ள். ஆதித்தன் — சூரியனும், அம்புலி — சந்திரனும், அங்கி — அக்கினியும், குபேரன் — குபேரனும், அமரர்தம் கோன் — தேவர்கட்கு அரசனாகிய இந்திரனும், போதில் பிரமன் - செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமாவும், புராரி - முப்புரவைரியாகிய ஸ்ரீகண்டருத்திரரும், முர அரி — முரன் என்னும் அசுரனுக்குப் பகைவராகிய விஷ்ணுவும், பொதியமுனி - பொதியமலை வாசராகிய அகத்தியமுனிவரும், காதிப் பொருபடைக் கந்தன் — கொன்று யுத்தஞ் செய்கின்ற வேற்படையையுடைய சுப்பிரமணியக் கடவுளும், கணபதி — சிவகணங்கட்கு அதிபதியாகிய விநாயகக்கடவுளும், காமன் முதல் — மன்மதனும் முதலாக, சாதித்த புண்ணியர் எண்ணிலர் — தம்மாற் சாதிக்கப்பட்ட புண்ணியத்தையுடையவர் அளவிறந்தவர், தையலைப் போற்றுவர் — இவ்அபிராமிதேவியைத் தரிசித்து வணங்கித் துதித்து வழிபடுவர். எ-று.

ஆதித்தன் முதலிய புண்ணியர் எண்ணிறந்தார் தேவியை வழிபட்ட வரலாற்றைப் பெரும்பான்மை சாத்தேய நூல்களினும், சிறுபான்மை சைவ நூல்களினும் காண்க.

அபிராமிதேவியை ஸ்ரீ கண்டருத்திரர் முதலாக ஈண்டுக் கூறிய அனைவரும் துதித்து வழிபடுவார். எனவே, அத்தேவியினது ஆதிக்கம் கூறியவாறும், நாமும் அப்புண்ணியத்தைச் சாதித்துப் போற்றல் அத்தியாவசியகமென வற்புறுத்தியவாறுமாயின. (67)

**தைவந்து நின்னடித் தாமரை சூடிய சங்கரற்குக்**
**கைவந்த தீயுந் தலைவந்த வாறுங் கரந்ததெங்கே**
**மெய்வந்த நெஞ்சினல் லாலொரு காலும் விரகர்தங்கள்**
**பொய்வந்த நெஞ்சிற் புகவறி யாமடப் பூங்குயிலே.**

**இ - ள்.** மெய் வந்த நெஞ்சில் அல்லால் — உண்மை யன்பு பொருந்திய உள்ளத்தின்கணல்லது, விரகர் தங்கள் பொய் வந்த நெஞ்சில் ஒருகாலும் புக அறியா மடப்பூங் குயிலே — கபடிகளது பொய்யன்பு பொருந்திய உள்ளத்தில் ஒரு காலத்தும் பிரவேசிக்க அறியாத இளமை பொருந்திய பூங்குயில் போலும் அபிராமிதேவியே! நின் அடித் தாமரை தைவந்து சூடிய சங்கரற்கு — தேவரீருடைய திருவடித் தாமரை மலர்களை வருடிப் பின் சிரசிற் சூடி ஊடல் தீர்த்த சிவபெருமானுக்கு, கைவந்த தீயும் — பற்றிச் சூடு தற்குக் கருவியாகிய தம்முடைய திருக்கரத்தின்கணுள்ள அபிசார ஓமாக்கினியும், தலைவந்த ஆறும் — சூடுதற்கிட மாயுள்ள சிரசின்கணுள்ள கங்காநதியும். எங்கே கரந்தது — அப்பொழுது எவ்விடத்தே ஒளித்துக்கொண்டன. (திருவாய்மலர்ந்தருளுக.) எ - று.

கையின்கணுள்ள தீயும் சிரசின்கணுள்ள ஆறும் முறையே திருவடிகளை வருடிப்பற்றலாகாமையும், பற்றி னும் சுடுதலும், சூடக்குளிர்வதுமாய்த் தடைசெயற்பால வாயினும், அவை நிகழக் காணாமையின், எங்கே கரந்த தென்றார். கரந்ததென்னுமொருமை அத்தொழின்மே னின்றது.

அபிராமிதேவி உண்டென்பார்க் கொளிவிளக்காயும், இன்றென்பார்க் கிருளாயும் இருப்பவராகலின், அவரை வழிபடுதற்கண் அடியவர்கட்கு விக்கினங்கள் ஊழ்வகை யான் உளவாயினும், அவை அவரைத் தடைசெயற்பால னவாகா. என்பதாம். (98)

குயிலா யிருக்குங் கடம்பா டவியிடைக் கோலவியன்
மயிலா யிருக்கு மிமயா சலத்திடை வந்துதித்த
வெயிலா யிருக்கும் விசும்பிற் கமலத்தின் மீதன்னமாங்
கயிலா யருக்கன் றிமவா னளித்த கனங்குழையே.

இ - ள். கயிலாயருக்கு அன்று இமவான் அளித்த கனங்குழை — கைலாசபதிக்கு அக்காலத்து இமயமலையரசன் தத்தஞ் செய்த கனவிய குழையினையுடைய அபிராமி தேவி, கடம்ப அடவி இடைக் குயிலாய் இருக்கும் — கடம்பவனத்தின் கண்ணே அதற்கேற்ப மரகதநிறக்குயிலாய் இருந்தருளுவர், வியல் இமய அசலத்து இடைக் கோல மயிலாய் இருக்கும் — இடவிதாகிய இமயமலையின் கண்ணே அதற் கேற்பப் பச்சைநிறமயிலாய் இருந்தருளுவர், விசும்பில் வந்து உதித்த வெயிலாய் இருக்கும் — ஆகாயத்தின்கண்ணே அதற்கேற்பக் கடலினின்றும் வந்துதித்த பொன்னிறமுடைய பாலசூரியனுயிருந்தருளுவர், கமலத்தின் மீது அன்னம் ஆம் — தாமரைப்பூவின்மீது அதற்கேற்ப வெண்ணிறம் பொருந்திய அன்னமாயிருந் தருளுவர், எ - று.

எனவே, இத்திருக்கடவூரின் கண்ணே இதற்கேற்பக் குங்கும நிறப் புத்தமிர்த சுகோதயமா யிருந்தருளுவர் என்பதூஉம் பெற்றும்.

பிறழுந்தோறும் தனித்தனி ஓரோர் நிறங்காட்டும் ஒருவகைக் கோசிகப் பஞ்ச கஞ்சுகம்போல, அபிராமி தேவி அடியவர் தனித்தனி ஓரோர் நிறமாகத் தியானித்து வழிபடுந்தோறும் அவ்வந்நிறமாய்த் தோன்றிப் பஞ்சவர்ணங்களையுமுடையவராய் விளங்குவர். என்பதாம்.

இனிக், கடம்பாடவியிற் குயிலாயிருக்கு மென்பதற்கு ஆறுதாரத் தலங்களுள்ளே துவாதசாந்தத் தலமாகிய மதுரையிற் குயிலாயிருக்கு மெனவும், விசும்பில் வெயிலா

யிருக்குமென்பதற்கு இருதயத்தானமாகிய சிதம்பரத்தின் கண்ணே ஞானசூரியனுயிருக்கு மெனவும், கமலத்தின் மீதன்னமாம் என்பதற்கு மூலாதாரத்தலமாகிய திருவாரூரின்கண்ணே அன்னமாயிருக்கு மெனவும் இம்மூன்று தாரத் தலங்களிலே தேவி வீற்றிருத்தலை விதந்து கூறிய தெனினுமாம். கடம்பவனம் மதுரை. (99)

**குழையைத் தழுவிய கொன்றையந் தார்கமழ் கொங்கைவல்லி**
**கழையைப் பொருத திருநெடுந் தோளுங் கருப்புவில்லும்**
**விழையப் பொருதிறல் வேரியம் பாணமும் வெண்ணகையு**
**முழையைப் பொருகண்ணு நெஞ்சிலெப்போது முதிக்கின்றவே.**

இ - ள். குழையைத் தழுவிய கொன்றை அம் தார் கமழ்கொங்கை வல்லி — இளந்தளிர்களோடு கூடிய கொன்றை மலர் மாலையினது நறுமணங் கமழுகின்ற தனங்களையுடைய பொற் கொடிபோலும் அபிராமிதேவியினுடைய, கழையைப் பொருத நெடும் திருத்தோளும் — மூங்கிலை மலைத்த நெடிய இரண்டு திருத்தோள்களும், கருப்பு வில்லும் — கரும்பாகிய வில்லும், விழையப் பொருதிறல் வேரி அம்பாணமும் — ஸ்திரீபுருஷர்கள் ஒருவரையொருவர் விரும்புமாறு இருவரையும் பொருகின்ற தேன்பொருந்திய அழகிய புஷ்பபாணங்களும், வெண் நகையும் — வெண்மையாகிய திருப்புன்னகையும், உழையைப் பொரு கண்ணும் — மானினது மருண்ட நோக்கத்தை யொக்கும் திருக்கண்களும், நெஞ்சில் எப்போதும் உதிக்கின்ற — என் மனத்தில் அனவரதமும் உதயஞ்செய்து கொண்டிருக்கின்றன. எ - று.

இறைவரது பிரத்தியங்கமாகிய திருவடையாள மாலையை இறைவி அவ்விறைவராகவே கண்டு, தந்திரு மார்போடணைத்தலின், கொன்றையந்தார் கமழ்கொங்கை என்றார். இவ்விறுதிச் செய்யுளின் ஈற்றுச் சீரை இந்நான் முதற் செய்யுளின் முதற்சீரோடியைத்து அந்தாதித் தொடைநிரப்பியவாறு தெளியப்படுதலின், வருஞ்செய்யுள் நூற்பயன் கூறவந்தமை தெள்ளிதிற்றுணியப்படும்.

அபிராமிதேவியினது தியானமே சதாகாலமும் என் மனத்திற் குடிகொண்டிருக்குந் தியானம். என்பதாம்.

(100)

### நூற் பயன்

**ஆத்தாளை யெங்க ளபிராம வல்லியை யண்டமெல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத் தாளைப் புவியடங்கக்
காத்தாளை யங்குச பாசாங் குசமுங் கரும்புமங்கை
சேர்த்தாளை முக்கண்ணி யைத்தொழுவார்க்கொரு தீங்கில்லையே.**

இ - ள். *அண்டம் எல்லாம்* **பூத்தாளை** — *சகல அண்டங்களையும் பெருது பெற்றவரும்,* **ஆத்தாளை** — *அதனுல் உலகமாதாவாயிருப்பவரும், மாதுளம் பூ நிறத்தாளை — மாதுளம்பூ* **நிறத்தையுடையவரும், புவி** *அடங்கக் காத்தாளை — பூமி முழுவதையும்* **காக்கின்றவரும்,** *அம்குச பாச அங்குசமும் கரும்பும் அங்கை சேர்த்தாளை — அழகிய தாமரைமலரையும் பாசாங்குசங்களையும் கரும்பையும் அகங்கைகளிலே தரித்தவருமாகிய, எங்கள் அபிராம வல்லியை — எம்முடைய அபிராமிதேவியை,* **தொழுவார்க்கு** *— (இந்நூலைக்கொண்டு)* **துதித்து வழிபடுமடியவர்களுக்கு, ஒரு தீங்கே இல்லை** *— வரக்கடவதொரு* **தீமையுமேயில்லை.** *எ - று.*

*குசம் — தாமரை; ஆகுபெயர். இந்நூலைக்கொண்டு என்பது இசையெச்சத்தான் வருவிக்கப்பட்டது.*

*அபிராமிதேவியை இந்நூல்கொண்டு தோத்திரஞ் செய்து வழிபடும் அடியவர்களுக்கு எய்தக்* **கடவதொரு** *தீங்கேயின்மையின், சம்பவிப்பன வெல்லாம் நன்மையே. என்பதாம்.* (101)

## அபிராமியந்தாதி மூலமும் உரையும்
முற்றுப் பெற்றது.

---

மெய்கண்டதேசிகர் திருவடி வாழ்க.

# அபிராமியம்மை பதிகம்

## தொண்டரொடு கூட்டுக

கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்
கபடுவா ராத நட்பும்
கன்றாத வளமையும் குன்றாத இளமையும்
கழுபிணி யிலாத உடலும்
சலியாத மனமுமன் பகலாத மனைவியும்
தவறாத சந்தா னமும்
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள்வா ராத கொடையும்
தொலையாத நிதியமுங் கோணாத கோலுமொரு
துன்பமில் லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்புமுத விப்பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய்
அலையாழி அறிதுயிலு மாயனது தங்கையே
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 1.

## வல்வினையை மாற்றுக

காரளக பந்தியும் பந்தியின் அலங்கலும்
கரிய புருவச் சிலைகளும்
கர்ணகுண் டலமுமதி முகமண்டலம் நுதற்
கஸ்தூரி யிட்ட பொட்டும்
கூரணிந் திடுவிழியும் அமுதமொழியுஞ் சிறிய
கொவ்வையின் கனிய தரமும்
குமிழனைய நாசியுங் குந்தநிகர் தந்தமும்
கோடுசோ டான களமும்
வாரணிந் திருமாந்த வனமுலையும் மேகலையும்
மணிநூ புரப்பா தமும்
வந்தெனது முன்னின்று மந்தகா சமுமாக
**வல்வினையை மாற்று வாயே**

ஆரமணி வானிலுறை தாரகைகள் போல நிறை
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 2.

## செங்கமல விழியருள்க

மகரவார் குழல்மேல் அடர்ந்து குமிழ் மீதினில்
மறைந்து வானைத் துறந்து
மைக்கயலை வேண்டிநின் செங்கமல விழியருள்
வரம்பெற்ற பேர்க ளன்றோ
செகமுழுதும் ஒற்றைத் தனிக்குடை கவித்துமேற்
சிங்கா தனத்தி லுற்றுச்
செங்கோலும் மநுநீதி முறைமையும் பெற்றுமிகு
திகிரியுல காண்டு பின்பு
புகர்முகத் தைராவதப் பாக ராகிநிறை
புத்தேளிர் வந்து போற்றிப்
போகதே வேந்திரன் எனப் புகழ விண்ணில்
புலோமசை யொடுஞ் சுகிப்பர்
அகரமுத லாகிவளர் ஆனந்த ரூபியே
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே!

## அறிவு நிறை மொழியருள்க

மறிகடல்கள் ஏழையுந் திகிரியிரு நான்கையும்
மாதிரக் கரியெட் டையும்
மாநாகம் ஆனதையும் மாமேரு என்பதையும்
மாகூர்மம் ஆனதைய மோர்
பொறியரவு தாங்கிவரு புவனமீ ரேழையும்
புத்தேளிர் கூட்டத் தையும்
பூமகனை யுந்திகிரி மாயவனையும் அரையிற்
புலியாடை உடையா னையும்
முறை முறைக ளாயீன்ற முதியவர்களாய்ப் பழைமை
முறைகள் தெரியாத நின்னை

மூவுலகி லுள்ளவர்கள் வாலையென் றறியாமல்
மொழிகின்ற தேது சொல்வாய்
அறிவுநிறை விழுமியர்தம் ஆனந்த வாரியே
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 4.

## அருள்மழை பொழிந்தருள்க

வாடாமல் உயிரெனும் பயிர்தழைத் தோங்கிவர
அருண்மழை பொழிந்தும் இன்ப
வாரிதியிலே நின்ன தன்பெனுஞ் சிறகால்
வருந்தா மலேய ணைத்துக்
கோடாமல் வளர்சிற் றெறும்புமுதல் குஞ்சரக்
கூட்டமுத லான சீவ
கோடிகள் தமக்குப் புசிக்கும் புசிப்பினைக்
குறையாம லேகொ டுத்து
நீடாழி யுலகங்கள் யாவையும் நேயமாய்
நின்னுதர பந்தி பூக்கும்
நின்மலீ! அகிலங்க ளுக்கன்னை யேயுன்னை
நீலியென் றோது வாரோ
ஆடாய நான்மறையின் வேள்வியால் ஓங்குபுகழ்
ஆதிகடவூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 5.

## மனச்சலிப்பில்லாமல் நல்குக

பல்குஞ் சரந்தொட் டெறும்புகடை யானதொரு
பல்லுயிர்க் குங்கல் விடைப்
பட்டதே ரைக்குமன் றுற்பவித் திடுகருப்
பையுறு சீவ னுக்கும்
மல்குஞ் சராசரப் பொருளுக்கும் இமையாத
வானவர் குழாத்தி னுக்கும்
மற்றுமொரு மூவர்க்கு மியாவர்க்கு மவரவர்
மனச்சலிப் பில்லா மலே

நல்குந் தொழிற்பெருமை உண்டா யிருந் துமிகு
நவநிதி யுனக்கி ருந்தும்
நானொருவன் வறுமையிற் சிறியனா னலந்
நகைப்புனக் சேயல்ல வோ?
அல்கலந் தும்பர் நாடென வெடுக் குஞ்சோலை
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 6.

## முத்தி தந்தருளுக

நீடுல கங்களுக் காதாரமாய் நின்று
நித்தமாய் முத்தி வடிவாய்
நியமமுடன் முப்பத் திரண்டறம் வளர்க்கின்ற
நீமனை வியாயி ருந்தும்
வீடுவீ டுகடோறும் ஓடிப் புகுந்துகால்
வேசற் றிலச்சை யும்போய்
வெண்டுகில் அரைக்கணிய விதியற்று நிர்வாண
வேடமுங் கொண்டு கைக்கோர்
ஓடேந்தி நாடெங்கும் உள்ளம் தளர்ந்து நின்(று)
உன்மத்த னாகி யம்மா
உன்கணவன் எங்கெங்கும் ஐயம்புகுந் தேங்கி
உழல்கின்ற தேது சொல்வாய்?
ஆடுகொடி மாடமிசை மாதர்விளை யாடிவரும்
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 7.

## அகத்தாமரையில் எழுந்தருளுக

ஞானந் தழைத்துன் சொரூபத்தை அறிகின்ற
நல்லோர் இடத்தி னிற்போய்
நடுவினி யிருந்துவந் தடிமையும் பூண்டவர்
நவிற்றும் உபதேச முட்கொண்(டு)
ஈனந்தனைத் தள்ளி எனதுநா னெனுமானம்
இல்லா மலேது ரத்தி

இந்திரிய வாயில்களை இறுகப்பூ தைத்து நெஞ்(சு)
இருளற விளக்கேற்றியே
ஆனந்த மானவிழி யன்னமே உன்னையென்
அகத்தா மரைப்போ திலே
வைத்துவே றேகவலை யற்றுமே லுற்றபர
வசமாகி அழியாத தோர்
ஆனந்த வாரிதியில் ஆழ்கின்ற தென்றுகாண்
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 8.

## அடியேனை வாவென்றழைக்குக

சலதியுல கத்திற் சராசரங் களையீன்ற
தாயா கினாலெ னக்குத்
தாயல்ல வோ யானுன் மைந்த னன்றோ எனது
சஞ்சலம் தீர்த்து நின்றன்
முலைசுரந் தொழுகுபா லூட்டியென் முகத்தையுன்
முன்தானை யால்து டைத்து
மொழிகின்ற மழலைக் குகந்துகொண் டிளநிலா
முறுவலின் புற்றரு கில்யான்
குலவிவிளை யாடல்கொண் டருண்மழை பொழிந்(து)
அங்கை
கொட்டி வாவென் றழைத்துக்
குஞ்சரமு கன்கந்தனுக் கிளையன் என்றெனைக்
கூறினால் ஈனம் உண்டோ?
அலைகடலி லேதோன்று மாருத அமுதமே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 9.

## திருவடி மலர்ந்தருளுக

கைப்போது கொண்டுன் பதப்போது தன்னில்
கணப்போதும் அர்ச்சிக் கிலேன்
கண்போதி னாலுன் முகப்போது தன்னையான்
கண்டு தரிசனை புரிகிலேன்

முப்போதில் ஒருபோதும் என்மனப் போதிலே
முன்னியுன் ஆல யத்தின்
முன்போது வார்தமது பின்போத நினைகிலேன்
மோசமே போயு ழன்றேன்
மைப்போத கத்திற்கு நிகரெனப் போதெரு
மைக்கடா மீதேறி யே
மாகோர காலன்வரு மப்போது தமியனேன்
மனங்கலங் கித்தி யங்கும்
அப்போது வந்துன் அருட்போது தந்தருள்
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 10.

## அபயமருளுக

மிகையுந் துரத்தவெம் பிணியுந் துரத்தநனி
வெகுளி யானதுந் துரத்த
மிடியுந் துரத்தநரை திரையுந் துரத்தமிகு
வேதனை களுந்து ரத்தப்
பகையுந் துரத்தவஞ் சனையுந் துரத்தவரு
பசியென் பதுந்து ரத்தப்
பாவந் துரத்தவெகு மோகந் துரத்தஉறு
பலகார்யமுந் துரத்த
நகையுந் துரத்தவூழ் வினையுந் துரத்தவாழ்
நாளுந் துரத்த வெகுவாய்
நாவரண் டோடியே கால் தளர்ந்திடு மென்னை
நமனுந் துரத்து வானோ
அகிலவுல கங்கட்கு மாதார தெய்வமே
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 11.

உ

# செய்யுள் முதற்குறிப்பகராதி

## அபிராமியந்தாதி

## அபிராமி பதிகம்

உ

அபிராமி துணை

யாழ்ப்பாணம்

கூட்டுறவுத் தமிழ்நூற் பதிப்பு விற்பனைக்

கழகத்தின்

## தெய்வப்பணி

மேலுஞ் சிறந்து விளங்க

மனமுவந்து

வாழ்த்துகின்றோம்.

*